# திராவிட இந்தியா

கு. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

★

ஆசிரியர் :
ந. சி. கந்தையா பிள்ளை



பிரீ பிரின்டெர்ஸ் அசசகததில்
அழுத்தப்பட்டது.

திப்புரிமை] 1949 [விலை ரூ 1.

# முன்னுரை

திராவிட மக்களின் வரலாற்றை நூறு வகையில் விரித்து எழுதலாம். அவ்வாறு நூல்கள் வெளிவரின் பொதுமக்களும் மாணவரும் திராவிட மக்களின் உண்மை வரலாறுகளை நன்குகற்று உண்மை அறிவர். இன்று பள்ளிக்கூடங்களுக்கு என எழுதப்படும் வரலாற்று நூல்களில் திராவிட மக்களைப்பற்றிய உண்மைச் செய்திகள் பல காணப்படுவதில்லை. திராவிட இந்தியா என்னும் இந்நூல் பற்பல ஆராய்ச்சி அறிஞர் ஆராய்ந்து கண்ட உண்மைகளை ஆதாரமாகக் கொண்டு கற்போர் எளிதிற் படித்துப் பொருள் விளங்கும் முறையில் அமைந்துள்ளது. திராவிட மக்களின் பொற்காலம் இற்றைக்கு ஆறாயிரம் ஆண்டுகளின் முன் உள்ளது. சங்ககாலம் திராவிட மக்களின் பொற்காலத்தின் கடைக்காலமாகவிருந்ததெனை அறிகின்றோம். முன்பின் மூவாயிரம் ஆண்டுகள்வரையில் திராவிட மக்களின் பொற்காலம் நிலவிற்று. இந்திய மக்களின் நாகரிகமென்பது திராவிட மக்களின் நாகரிகமே. இவ்வுண்மையை இன்று வரலாற்றாசிரியர்கள் எடுத்துக்கூறமுற்பட்டுள்ளார்கள். பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, பண்டிதர் சவிராய பிள்ளை காலம் முதல் அறியப்பட்டிருந்த பற்பல உண்மைகள் பொதுமக்களிடையே பரவாதும் பரப்புவாரற்றுக் கிடந்து இன்று பரவுவது ஓர் நற்காலத்தின் அறிகுறியேயாகும்.

சென்னை
1-4-1949

ந. சி. கந்தையா.



# பொருளடக்கம்

# திராவிட இந்தியா

## தோற்றுவாய்

இந்திய மக்கள் வரலாற்றில் திராவிட மக்கள் வரலாறு மிக முதன்மையுடையது. இன்று இந்திய நாகரிகம் எனப் பெயர் பெறுவது ஆரிய திராவிட நாகரிகங்களின் கலப்பினால் தோன்றியது. ஆரிய நாகரிகத்துக்கு முற்பட்டது திராவிட நாகரிகம். இதிற் சிறிதும் ஐயப்பாடு இல்லை. நீண்டகாலம் திராவிட நாகரிகத்தைப்பற்றிய செய்திகள் அறியப்படாது கிடந்தன; அதனால் திராவிடரின் பண்பாட்டைக் குறித்த செய்திகள் வரலாற்றாசிரியர்களால் பற்பலவாறு திரித்துக் கூறப்படலாயின. இன்று தமிழரின் நாகரிகத்தைப் புலப்படுத்தும் சான்றுகள் பல கிடைத்துள்ளன. இச்சிறிய நூல் திராவிடரின் நாகரிகச் சிறப்புக்களைப்பற்றிக் கூறுகின்றது.

## திராவிடர் பிறப்பிடம்

"திராவிட மக்கள் அயல்நாடுகளிலிருந்து இந்தியாவின் வடபகுதிகளை அடைந்தார்கள். பின்பு ஆரியர் என்னும் புதிய சாதியினர் அங்கு வந்தனர். அவர்கள் திராவிடரை வென்று தெற்கே துரத்தினர். அவர்கள் தெற்கே வந்து வாழ்ந்தார்கள். அவர்களே தமிழர் எனப்படுவோர்." என மேல்நாட்டாசிரியர் சிலர், பல ஆண்டுகளின்முன் உண்மை அறியாது மயங்கி எழுதி வைத்தனர். அக்கொள்கை இன்று சிறிதும் ஏற்றுக் கொள்ளத் தக்கதாயிருக்கவில்லை. பள்ளிச் சிறுவர்களுக்கு வரலாறு எழுதும் ஆசிரியர் பலர் உண்மையல்லாத பழைய

கொள்கையைப் பின்பற்றி எழுதிவருவது வருந்தத்தக்கதே யாகும்.

திராவிட மக்கள் வெளிநாடுகளிலிருந்து வந்து இந்திய நாட்டை அடைந்தார்கள் என்று கூறுவதற்கேற்ற ஆதாரம் ஒன்றேனும் காணப்படவில்லை. பழைய கற்காலம் முதல் இரும்புக்காலம் வரையில் மக்கள் தொடர்பாகச் செய்து பயன்படுத்திய ஆயுதங்களும் பிறபொருள்களும் இந்திய நாட்டின் பல்வேறு இடங்களிற் கண்டு எடுக்கப் பட்டுள்ளன.[1]

திராவிட மக்கள் அயல்நாடுகளினின்றும் வந்தார்கள் என்று கூறுவோர்க்குத் துணையாயிருப்பது ஆப்கானிஸ் தானத்தின் ஓர் பகுதியில் தமிழுக்கு இனமுடைய பிராகூய் மொழி வழங்குவது. இற்றைக்கு ஆறுயிரம் ஆண்டு களின்முன் சிந்து ஆற்று வெளிகளில் திராவிடர் நாகரிகம் பரவியிருந்தது. அங்கு தமிழ் வழங்கிற்று. இம்மக்களின் தொடர்புடையவர்களே ஆப்கானிஸ்தானத்தில் தங்கி வாழ்ந்தார்கள். அவர்களின் சந்ததியினரே திராவிடத் தின் சம்பந்தமுடைய பிராகூய் மொழியை இன்றும் பேசி

1. We have a continuity of culture from paleolithic to neolithic, from neolithic to megalithic and megalithic to iron age in South India—Origin and Spread of the Tamils—V. R. Ramachandra Dikshitar. M. A.

2. I ask what is the objection to state that a branch of Dravidians from south went to North and North-West and settled there? Diffusion of Dravidians in Rajaputana and Central India in prehistore times is seen from the dialects Villi and Santal prevalent today, bearing close affinity to Dravidian languages Add to this, the Mohenjo Daro script which is very probably Dravidian.—ibid pp. 10, 11.

திராவிட மக்கள் பழமைதொட்டே இந்திய நாட்டில் வாழ்ந்து வருகின்றார்கள். அவர்களின் பழைய நாடு குமரி முனைக்குத் தெற்கிலும் பரந்து கிடந்தது.

## நாகரிகத்தின் பழமை

மேற்கு ஆசியா எகிப்து முதலிய நாடுகளில் பழைய இடிபாட்டு மேடுகள் தோண்டி ஆராயப்பட்டுள்ளன. அங்கு கிடைத்த பழம் பொருள்களைக்கொண்டு அந் நாடுகளின் நாகரிகம் ஏழாயிரம் அல்லது எண்ணாயிரம் ஆண்டுகளுக்குமுற்பட்டதென ஆராய்ச்சியாளர் துணிந்துள்ளனர். மைசூரிலே சிற்றால்ரக் என்னும் இடத்திலும் சிந்துவெளியிலும் செய்யப்பட்ட அகழ் ஆராய்ச்சிகளால் இந்திய நாட்டின் நாகரிகமும் அந்நாட்டு நாகரிகங்களை ஒத்த பழமையுடையதென அறியப்படுகின்றது. எகிப்து, மேற்கு ஆசியா முதலிய நாடுகளில் நாகரிகத்தைத் தோற்றுவித்தோர் அயல் நாடுகளினின்றும் சென்றவர்களாவர் என்றும், அவர்கள் இந்திய நாட்டினின்றும், சென்றார்கள் எனக் கொள்வதற்குப்பல ஏதுக்கள் உள்ளனவென்றும் சிறந்த மேற்றிசை ஆராய்ச்சி அறிஞர் பலர் புகன்றுள்ளார்கள்.[3]

---

3. If we take into consideration all these circumstances and examine them critically one has to assume that the authors of these early cultures in the East Mediterranean were emigrants from South India speaking Dravidian dialects. The language migrated and with it the peoples who spoke that language. So my humble thesis is that civilization of the future was borne not on the shores of the Mediterranean but on the coasts of the Indian peninsula and on the banks of its mighty rivers the Kaveri, Thambraparni, the Periyar and Amarovathi, not to speak of the Krishna, Godavari and Narbada—ibid p. 27.

## தமிழும் திராவிடமும்

இன்று தமிழரைக்குறிக்கத் திராவிடர் என்னும் பெய ரும் வழங்குகின்றது. திராவிடம் என்னும் சொல்லைப் பற்றிப்பலர் பலவாறு ஆராய்ந்து கூறியுள்ளார்கள். திரா விடமென்பது தமிழ் என்னும் சொல்லின் உச்சரிப்பு வேறுபாடு என்பதே ஆராய்ச்சி அறிஞர் இறுதியாகக் கொண்ட முடிவு. இன்று திராவிடம் என்னும் சொல் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு முதலிய மொழிக் கூட்டத்தைக் குறிக்க வழங்குகின்றது. திரா விடர் என்னும் பெயர் இம் மொழிக் கூட்டத்துக்குரிய மக்களைக் குறிக்கின்றது.[4]

## நிலத்திற்கேற்ப மக்கள் பண்பாடு அடைதல்

உலகில் மக்கள் வாழக்கூடிய இடங்கள் ஐந்து வகை யின என்று பழந்தமிழர் கண்டனர். அவர்கள் அவ் வகை நிலங்களைத் திணைகள் என்றனர். திணை என்பது திட் அல்லது திண் என்னும் அடியாகப் பிறந்தது. நிலப் பரப்பு என்பது அதன் பொருள். திட் அல்லது திண்

4. The word Dravida is the name for the speakers of a group of South Indian languages - Tamil, Malayalam, Kanarese and Telugu. No stretch of imagination is required to believe that of them Tamil is the oldest dialect and in my opinion the parental dialect. Though a claim has been recently made for the ancientness of the Kannada tongue, still it is safe to assert that Malayalam, Kanarese and Telugu became cultivated languages only a thousand years ago, when the influence of Sanskrit language had reached its high water mark in the Peninsula. So the term Dravidian we can definitely say, originally stood for the Tamil language and its descendants ibid p. 14.

என்பதிலிருந்தே திட்டு, திட்டை, திடர், திண்ணை முதலிய சொற்கள் பிறந்தன. திண் என்பது வலிமையையுங் குறிக்கும். இடங்களின் சூழ்நிலைக்கேற்பவே மக்களின் திருத்தமும் வளர்ச்சியடைந்தது. தண்ணீரில்லாத வறண்ட மணற் பகுதி பாலை எனவும், மலைநாடு குறிஞ்சி எனவும், மலைநாட்டுக்கும் கீழ்நாட்டுக்கும் இடைப்பட்ட குறுங் காட்டு நிலம் முல்லையெனவும், ஆற்றோரங்கள் மருதமெனவும், கடற்கரை நெய்தல் எனவும் வழங்கின. இவ்வகை நிலங்களும் தமிழ்நாட்டில் ஓரளவு உண்டு. மக்கள் தோன்றிய காலம் முதல் தமிழர் தென்னிந்தியாவில் வாழ்ந்துவருகின்றார்கள். அவர்கள் ஒரு நிலத்தினின்று இன்னொரு நிலத்துக்குச் சென்று படிப்படியான சீர்திருத்தங்களை அடைந்தனர்.

## மலையும் மலைசார்ந்த நிலமும்

மக்கள் முதல்முதல்குடியேறி வாழ்ந்த இடம் மலை. மிக மிக நீண்ட காலம் மழையினாலும் பருவக்காற்றினாலும் தாக்குண்டதால் தேய்ந்துபோன சிறிய குன்றுகள் பல தென்னிந்திய பூமிகளிற் காணப்படுகின்றன. இம் மலைஇடங்களுக்குக் கீழே தண்டகம் என்னும் இருண்ட காடு இருந்தது. அங்கு சிங்கம், புலி, யானை, காட்டு எருமை, சிறுத்தை, மனிதனுக்கு அழிவைச் செய்யும் பூச்சி வகைகள் காணப்பட்டன. ஆதிகால மனிதன், வெய்யில், மழை, விலங்குகள் முதலியவைகளினின்று தன்னைக் காப்பாற்றிக்கொள்ளக் கூடிய குகைகள் மலையிடங்களிலிருந்தன. அவன் தண்ணீரைச் சேமித்துவைப்பதற்கு மண் பாத்திரங்களைச் செய்ய அறிந்திருக்கவில்லை. நீரூற்றுகள் வற்றிய காலத்தில் பாறைகளிலுள்ள குழிகளில் நீர் நிறைந்திருந்தது. அவன் அதனை கைகளால் அள்ளிப் பருகி

ஞன்; காலடியிற் கிடந்த கற்களை எடுத்து அவைகளி லிருந்து கோடரி, ஈட்டிமுனை, அரியும் கருவிகள், சுரண்டும் கருவி, முதலியவைகளைச் செய்யப் பழகிக்கொண்டான். இந்நிலையிலிருந்து மனிதனின் சீர்திருத்தம் வளர்வதா யிற்று. மிக முற்பட்ட திருத்த காலம் பழைய கற்காலம் எனப்படும். பழைய கற்கால நாகரிகத்தைக் காட்டும் கையினாற் செய்யப்பட்ட பொருள்கள் கடப்பா, நெல் லூர், வடஆற்காடு, செங்கற்பட்டு முதலிய இடங்களிற் கிடைத்துள்ளன.

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் பழங்கள் விதை கள் கிழங்குகளை உண்டு வாழ்ந்தனர். பருவகால மாறு தல்களால் இவ்வுணவுப் பொருள்கள், சிற்சில காலங்களில் அரிதிற்கிடைப்பவாயின. ஆகவே அவர்கள் ஊன் உண வையும் கொள்ளத்தொடங்கினர். அவர்கள் தற்காப்பின் பொருட்டு விலங்குகளோடு அதிகம் போராட வேண்டி யிருந்தது. அதனால் அவர்கள் வேட்டை ஆடுவதில் திறமை பெற்றனர். ஆகவே தொடக்கத்தில் மனிதனின் தொழில் வேட்டையாடுவதாகவிருந்தது; அப்பொழுது அவர்கள் ஓரிடத்தில் தங்காது அலைந்து திரிந்தார்கள். உலகம் முழுமையிலும் கண்டெடுக்கப்பட்டுள்ள பழைய கற்கால ஆயுதங்கள் எல்லாம் ஒரே வடிவின. இதனால் ்கால மனிதன் உலகில் எங்கும் அலைந்து திரிபவனு

குறிஞ்சி நிலச்சூழல், மனித சீர்திருத்தத்திற்கு அடிப் படையாகிய இரண்டு புதியவற்றைக் கண்டுபிடிக்கும்படி செய்தது. அவற்றுள் ஒன்று வில்லும் அம்பும், மற்றது நெருப்பு உண்டாக்குதல். மலைகளில் மூங்கில் அதிகம் வளர்கின்றது. மலையில் வாழும் மக்கள் மூங்கிலின்

வளையுந்தன்மையை நோக்கி அறிந்தார்கள். அவர்கள் அதனைப் பிளந்து இருமுனைகளிலும் கொடியைக் கட்டி நீண்ட முட்களை அதில் வைத்து எய்யப் பழகினார்கள். இன்றும் மலைகளில் வாழும் மக்கள் ஒரே அம்பினால் ஒரு புலியைக் கொல்லும் திறமை பெற்றிருக்கிறார்கள்.

ஆதிகால மக்கள் மலையில் தீ உண்டாகி எரிவதைக் கண்டார்கள். மூங்கில் ஒன்றோடு ஒன்று உராஞ்சுவதால் தீயுண்டாகின்ற தென்பதை அவர்கள் அறிந்தார்கள்; ஆகவே தாமும் இரண்டு தடிகளை ஒன்றோடு ஒன்றை ஒரோஞ்சித் தீ உண்டாக்கலாமென எண்ணினார்கள். தாம் வேட்டையாடிக் கொன்ற விலங்குகளின் இறைச்சியை வேகச் செய்யும் பொருட்டு அவர்கள் முதலில் நெருப்பைப் பயன்படுத்தினர்.

ஆடவர் வேட்டையாடச் சென்றார்கள். பெண்கள் காட்டிற் சென்று பழங்களைப் பொறுக்கினார்கள்; கிழங்குகளை அகழ்ந்தார்கள்; தாம் வாழிடங்களைச் சுற்றித் தானே விளைந்த மலை நெல் மூங்கிலரிசி முதலியவைகளையும் சேகரித்தார்கள். பெண்களின் அடுத்த கடமை குழந்தைகளை வளர்ப்பது. இவ்வகை நிலையிலிருக்கும்போது அவர்கள் வீடு அமைக்க அறியவில்லை. தென்னிந்திய வெப்ப நிலைக்கு வீடு வேண்டியதில்லை; மர நிழல்களும் மலைக்குகைகளுமே ஒதுக்கிடங்களாகப் பயன்பட்டன. மக்கள் தொடக்கத்தில் வீடுகளை உறைவிடத்தின் பொருட்டு அமைக்கவில்லை; தமது செல்வமாகிய உணவுப் பொருள்களைப் பத்திரப் படுத்திவைக்கும் பொருட்டு அமைத்தனர். பழைய கற்கால மனிதனுக்கு உணவைச் சேமித்து வைக்கும் தேவை உண்டாயிருக்கவில்லை. வீடு இல்லாமையாலும், அலைந்து திரியவேண்டிய இன்றியமையாமையாலும் வீட்

டில் தங்கி வாழ்வதாகிய உணர்ச்சி ஆடவரிடையே எழ வில்லை. ஆகவே தாயாட்சி முறையான வாழ்க்கை ஆதியில் வளர்ச்சியடைவதாயிற்று.

இவ்வகையான வாழ்க்கையை இன்னொன்றும் ஊக்கியது. முற்கால மனிதன் ஆடம்பரமான மணக்கிரியைகளால் கட்டுப்பட்டிருக்கவில்லை. ஆடவரும் மகளிரும் காதலித்து மணந்தனர். சில நாட்களின் பின் உறவினரை அழைத்து விருந்து இட்டனர். இதுவே முற்காலத் திருமணக் கிரியையாகவிருந்தது. திருமணம் என்றும் நிலையான தன்மை யுடையதாகவிருக்கவில்லை. தனிப்பட்ட சொத்து இன்மையும் நிலையான வீடு இன்மையும் தாயாட்சி முறையான வாழ்க்கைக்கு நீண்ட காலம் வாய்ப்பு அளித்தன.

தமது மேனியை அலங்கரித்துக் கொள்வதில் ஆடவருக்கும் மகளிருக்கும் விருப்பு உண்டு; இவ்விருப்புப் பெண்களுக்கு அதிகம். குறப்பெண்கள் ஓய்வு நேரங்களில் ஓடுகளைப் பொறுக்கினார்கள்; அவைகளை மாலையாகக் கோத்து அணிந்தார்கள். அவர்களின் காதலர் வேட்டையாடுவதிற் கிடைத்த புலிநகம், புலிப்பல் போன்றவைகளைக் கொடுத்தார்கள். அவ்வைகளையும் அவர்கள் கழுத்தில் அணிந்தார்கள். பிற்காலத்தில் இவையே தாலியின் வடிவாகமாறின. தென்னிந்தியப்பெண் தாலிதரித்தல் திருமணம் செய்து கொண்டமைக்கு அடையாளமாகும். பெண்களின் இன்னொரு அலங்காரம் தழைஉடை. தழைஉடை என்பது கொடியிற்கட்டிய தழைகளாலான உடை. இவ்வுடை உடுக்கும் வழக்கம் இன்றும் சில காட்டுச் சாதியினரிடையே காணப்படுகின்றது.

மணலும் மணல்சார்ந்த இடமும் பாலை எனப்படும். இது மக்கள் வாழக்கூடிய இடத்தின் ஓர் உட்பிரிவில் அடங்கும். வேடன் காட்டுவிலங்குகளைத் துரத்திச் செல்லும்போது பாலைநிலத்தில் நிலையில்லாது சிலகாலம் தங்குவான். பாலைநிலத்தில் சிலகாலம் தங்குவோர் அல்லது அங்கு வாழ்வோர் மறவர் எனப்படுவர். மறம் வீரத்தை உணர்த்தும். இவர்[1] கள்ளர் எனவும் பட்டனர். பாலை நிலம் செழுமையற்றதாதலாலும் பாலைநில மக்கள் போர்த் தொழிலில் சிறந்தவர்கள் ஆதலினாலும் மறவரும் கள்ளரும் செல்வரையும் மற்றநிலங்களில் வாழும் வலியற்றவர்களையும் கொள்ளையிட்டு வாழ்வாராயினர். இதனால் மறம் என்பது கொடுமையையும் கள்ளர் என்பது திருடரையும் குறிக்க வழங்கலாயின.

குறிஞ்சி நிலத்தில் மக்கள் பெருகியபோது உணவு சுருங்கிற்று. அப்பொழுது மக்கள் அயலிலுள்ள முல்லை நிலத்திற்குச் செல்வாராயினர். அப்பொழுது அவர்கள் சீர்திருத்தத்தில் இன்னொரு படியை அடைந்தனர். எருமை, பசு, ஆடு, செம்மறியாடு போன்ற விலங்குகளை இவர்கள் பழக்கி வளர்த்தார்கள். அவர்கள் குறவராயிருந்தபோது நாய் பழக்கி வளர்க்கப்பட்டது. முல்லை நிலத்தில் ஆடுமாடுகள் விரைவிற் பெருகின. ஆகவே

---

1. கள்வர் என்னும் பெயர் வலியை உணர்த்தும்; கள் என்னும் அடியாகப் பிறந்தது - களிறு, (போர்க்)களம் முதலிய சொற்கள் கள் என்னும் அடியாகப் பிறந்தவை. மதுவைக் குறிக்கும் கள் என்பதற்கு வலியைத் தருவது என்பது பொருள். பி. தி. சீனிவாச ஐயங்கார்.

சொத்து உண்டாயிற்று. இதனால் குடும்பங்களும், குடிக ளும் தோன்றி வளர்ந்தன.

ஆடவரும் மகளிரும் ஒருவரை ஒருவர் காதலித்த லும், காதலின் அடையாளமாகக் காதலன் புலிநகம், இலையுடை முதலியவற்றைக் காதலிக்குக் கொடுத்துக் கிரியை இன்றி மணந்துகொள்வதுமாகிய மணம் களவு எனப்பட்டது. குறிஞ்சி நிலத்திற்றோன்றிய இவ்வகை மணங்கள் நின்றுபோயின. இப்பொழுது கற்பு ஒழுக் கம் தோன்றிற்று. காதலர் ஒருவரோடு ஒருவர் பழகுவ தன்முன் மணச் சடங்கு இயற்றப்பட்டது. இலைகளா லும் மலர்களாலும் அலங்கரிக்கப்பட்ட பந்தரின்கீழ் சுற் றினர் திரண்டிருந்து மணக்கிரியை நடத்தப்பட்டது.

சொத்துச் சேரத்தொடங்கியதும், கற்பு ஒழுக்கம் தோன்றியதும் சமூகம் தந்தை ஆட்சிமுறையாக வளர்வ தாயிற்று. தந்தையே ஆடுமாடுகளுக்குச் சொந்தமுடை யவனாயிருந்தான். நிலங்களைப் பிரித்தால் ஆடுமாடுகள் மேய்வதற்கு முடியாமல் போகும். ஆகவே கூட்டுக் குடும்ப வாழ்க்கை தோன்றிற்று. தந்தை ஆட்சியில் பெரிய குடும்பத்தலைவன் அரசன்போல் ஆயினான். இம் முறையில் அரசன் தோன்றினான். ஆட்சிமுறை முதலில் முல்லை நிலத்திலேயே தோன்றிற்று. கோன் என்பது பழைய தமிழ்ச்சொல். இது அரசனைக் குறிக்க வழங்கு கின்றது. ஆய்ச்சி என்னும் சொல் இடைச்சியையும்

ம

மற்ற நாடுகளில் இடையரின் வாழ்க்கை இடம்விட்டு இடம் அலைந்து திரிவதாகவிருந்தது. தென்னிந்தியா செழிப்புடையதாயும் எல்லாக் காலங்களிலும் ஆடுமாடுக

ளுக்கு வேண்டிய உணவு கிடைக்கக்கூடியதாகவும் இருந் தமையால் தென்னிந்திய இடையருக்கு இடம்விட்டு இடம்செல்லவேண்டிய கட்டாயம் உண்டாயிருக்க ஆகவே தென்னிந்திய இடையரின் வாழ்க்கை ஓரிடத்தில் தங்கியிருப்பதாக அமைந்தது.

இடையர் ஆடு மாடுகளை மேய்ச்சல் நிலத்துக்கு ஓட்டிச் சென்றார்கள். மந்தைகள் மேயும்போது அவர் கள் மரநிழலில் தங்கியிருந்தார்கள்; பொழுதுபோக்கின் பொருட்டு மூங்கிற் குழலில் இனிய இராகங்களைப் பாடி ஞர்கள். ஆடு மாடு மேய்ப்பவர்களில் ஒரு பிரிவினர் குறும்பர் எனப்பட்டனர். இவர்கள் மயிர் நீண்டு வளரும் குறும்பு ஆடுகளை வளர்த்தனர். குறும்பு ஆடுகளின் மயிரி லிருந்து கம்பளி செய்யப்பட்டது.

## கடலும் கடல்சார்ந்த நிலமும்

இதற்கு அடுத்த படியில் கடற்கரை நிலம் மக்களால் குடியேறப்பட்டது. இங்கு வாழ்ந்த மக்கள் கரையை அடுத்த கடலில் மீன் பிடித்தார்கள்; பின்பு ஆழமான நீரிற் சென்றார்கள். கடற்கரையில் வாழ்வோர் பரதவர் எனப்பட்டனர். இவர்களின் தொழில்கள் மீன் பிடிப் பதும் மரக்கலஞ் செய்வதுமாயிருந்தன. மிகப்பெரிய மரக் கலங்கள் கட்டுமரங்களாயிருந்தன. இதன்பின் தோலால் மூடப்பட்ட கூடைகள் தோணிகளாகப் பயன்படுத்தப் பட்டன. நெய்தல் நிலத்தில் கிடைக்கும் முக்கிய பொருள் கள், உப்பும் மீனும். பரதவர் இவைகளை மற்ற நிலங் களுக்குக் கொண்டு சென்று பிற உணவுப் பொருள்களுக் குப் பண்டமாற்றுச் செய்தனர். பரதவர் இவ்வாறு வணிகராயினர். அவர்கள் தமது பண்டங்களைப் பொதி

மாடுகளில் ஏற்றிச் சென்றனர். இந்தியப் பொருள்களை ஆபிரிக்கா, அராபியா முதலிய மேற்கு நாடுகளுக்கும், கிழக்கே மலாயா, சீனு முதலிய நாடுகளுக்கும் ஏற்றிச் சென்ற கடலோடிகள் தோன்றினார்கள். கடற்கரை நிலங்கள் சில பயிர்ச் செய்கைக்கு ஏற்றவாயிருந்தன. அங்கு பயிரிடப்பட்டது.

## வயலும் வயல்சார்ந்த நிலமும்

மருத நிலமக்கள் நிலத்தை உழுது பயிரிட்டார்கள். ஆற்றோரங்களில் வாழ்ந்த மக்கள் ஆற்று வெள்ளத்தை வாய்க்கால் வழியாக வயல்களுக்குப் பாய்ச்ச அறிந்திருந்தார்கள். இவ்வாறு மிக மிக முற்காலத்திலேயே பயிர்ச் செய்கை தென்னிந்தியாவில் மிக வளர்ச்சியடைந்திருந்தது. ஆற்றுப் பள்ளத்தாக்குகளுக்கு அப்பால் பஞ்சு விளையும் நிலம் இருந்தது. புதிய கற்கால மக்கள் பஞ்சிலிருந்து நூல் நூற்கவும் நூலால் ஆடை நெய்யவும் அறிந்திருந்தார்கள்.

இப்பொழுது மக்கள் மரங்களால் வீடு கட்டினார்கள். தேவைக்கு அதிகமான தானியம் வீடுகளில் சேமித்து வைக்கப்பட்டன. மற்ற நிலங்களிலுள்ள உப்பு, மீன், வெண்ணெய் தயிர் கல் ஆயுதங்கள் போன்றவைக்குத் தானியம் பண்டமாற்றுச் செய்யப்பட்டது. மருத நிலத்தில் பண்டமாற்றுச் செய்யமுடியாத பண்டங்களை வெளியே கொண்டு செல்லவேண்டிய அவசியம் உண்டாயிற்று. பண்டங்களைக் கொண்டு செல்வதற்கு வண்டிகள் செய்யக் கண்டு பிடிக்கப்பட்டது. உணவுக்குப் பயன்படக் கூடிய மரஞ்செடிகளும் கண்டறியப்பட்டன. இவ்வாறு திராவிடநாகரிகம் இந்தியநாட்டிலேயே தோன்றி வளர்ச்சியடைந்தது. இந்தியாவின் அயலிலிருந்து நாகரிகம் இந்தி

யாவை அடைந்ததென்பதற்கு ஆதாரம் சிறிதும் காணப் படவில்லை.[1]

## பேச்சு

சமையலும், உடையும் அல்லாத இன்னொன்றும் அறியப்பட்டது. அது பேச்சு. பேச்சு இசை சம்பந்தப் பட்டது அல்லது இசை சம்பந்தப்படாததாக இருக்க லாம். பாடலுக்கு முன் பேச்சு இருந்ததெனப் பலர் கருதுகின்றனர். ஆதியில் பகுதி இசை சம்பந்தமும், பகுதி இசை சம்பந்தமில்லாததுமாயிருந்த பேச்சின் வேறு பாடே பாடலும் வசனமும் என வேறு பலர் கருதுகின்ற னர். இதனை நன்கு அறிந்துகொள்ள முடியவில்லை. இலக் கிய வளர்ச்சியில் உரை நடைக்கு முற்பட்டது பாடல் எனத் தெரிகின்றது. பண், பாண் என்பது இசையின் பகுதிக்குப் பெயர். பண் என்பதிலிருந்து பாடு, பாட்டு முதலிய சொற்கள் எழுந்தன. பாடுதல் தமிழரின் ஆதி காலப் பொழுது போக்குகளில் ஒன்று. பாணர் தொடக் கத்தில் பாடகராயிருந்தனர். நாகரிகம் வளர்ந்தபோது அரண்மனையில் அரசாங்க பாடகர் இருந்தனர். தமிழர் நாகரிகம் வளர்ச்சியுற்றிருந்த காலத்தில் பாணர் அரசரின் நண்பரும் அவருக்கு ஆலோசனை கூறுவோருமாயிருந்தனர்.

---

1.…whouse growth in South India is evidenced by the presences of the artifacts of the palaeolithic neolithic and early iron ages throughout the country, and is traceable in the earliest strata of Tamil language and literature, show us that the growth of civilization in the Tamil land is entirely due to geographical causes operating *in situ* and not to historical events such as incursions of foreigners

—Environments and culture—P. T. S Aiyengar.

## சமயம்

மனிதன் ஆயுதம் செய்யும், உணவைச் சமைக்கும், உடை அணியும், பேசும் விலங்காக மாத்திரம் இருக்கவில்லை; சமயமுடைய விலங்காகவும் வாழ்ந்தான். அவன் தான் விரும்பியவைகளைப் பெறவும், தன்னை அச்சுறுத்தும் தீமைகளைப் போக்கவும் வலிய ஆற்றலை வேண்டிக் கொள்ளும் வழிகளையும் அறிந்திருந்தான். அவ்வழிகள் மந்திர வித்தை தொடர்பான கிரியைகள். அவை விருந்து, பாட்டு, கூத்து வடிவிலிருந்தன. பிற்காலத்தில் விருந்து பாட்டு கூத்து என்பன வெவ்வேறாகப் பிரிக்கப்பட்டன. இடங்களுக்கேற்ப ஒவ்வொரு நிலத்திலும் தெய்வங்களும் கிரியைகளும் தோன்றின.

பழைய தமிழ் இலக்கியங்கள் மக்களின் வாழ்க்கையைக் கண்ணாடிபோல் காட்டுகின்றன. பழைய தமிழ் இலக்கியங்கள் பெரும்பாலும் மறைந்துபோயின. வாணிகம், ஆட்சி, தொழில், ஆட்சி முறைகள் கையாளப்பட்டன. இலக்கியங்கள் பெரும்பாலும் மனப்பாடஞ் செய்யப்பட்டுவந்தன. பழைய இலக்கியங்கள் பல இறந்துபோயின என்பதற்குத் தொல்காப்பியப் பொருளதிகாரத்துக்கு உரை எழுதிய பழைய ஆசிரியர்கள் துறைகள் பலவற்றுக்கு ஏற்ற மேற்கோள் காட்டமுடியாமல் இருந்தமையே சான்றாகும். இப்பொழுது கிடைத்துள்ள பழைய இலக்கியங்கள் மக்களின் வாழ்க்கை முறைகள் அவாகள் வாழ்ந்த நிலங்களுக்கேற்பத் தோன்றி வளர்ச்சியடைந்தன என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றன.

## பாடல்கள்

தமிழ்நாடு நில அமைப்புக்கேற்பப் பிரிக்கப்பட்டிருந்த காலத்தில் பாடல்கள் தோன்றின. ஒவ்வொரு நிலத்தி லும் அந்நிலத்தின் வாழ்க்கைக் கேற்ற பாடல்கள் எழுந் தன. ஆகவே திணை என்பது குறித்த நிலத்துக் குரிய பாடல் வகையைக் குறிப்பதாயிற்று. மனிதனின் காதல், போர் என்பவைகளே புலவர் பாடுதற்கு ஏற்ற கருத்துக் களாகக் கொள்ளப்பட்டன. ஆகவே பாடல்கள் இரு வகைப்பட்டன. அகத்திணை, புறத்திணை என்பன அவற் றின் பிரிவுகள். அகம் என்பது காதலுடைய இருவர் மாத்திரம் உணர்ந்து அனுபவிக்கக் கூடியது; புறம் மற்றவ ரோடு கலந்து பங்குபற்றத் தக்கது. ஐந்து நிலங்களுக்கு முரிய காதற் செயல்கள் ஐந்து எனக்கொள்ளப்பட்டன. குறிஞ்சி நிலத்துக்குரியவை காதலர் ஒருவரை ஒருவர் கண்டு காதலித்து உடன் மணத்தல், மலைக் காட்சி முதலி யன. ஆடவரும் மகளிரும் தனித்தனியே எதிர்ப்பட்டு காதலிப்பதற்கு ஏற்ற இடம் மலையாதலின் கூடலும் கூடல் நிமித்தமும் குறிஞ்சி நிலத்துக்கு உரிப்பொருளாகக் கொள்ளப்பட்டன.

காதலன் காதலியை சுரவழியே பெண் வீட்டார் அறியாது கொண்டேகுதல், காதலன் காதலியை விட்டுப் பிரிந்து செல்லுதல் போன்ற பொருள்களைப் பாலைப் பாடல்கள் கூறுகின்றன. பிரிந்து சென்ற காதலன் வருந்துணையும் ஆற்றியிருப்பதாகிய செயலைக் கூறுவது முல்லை. தலைவனைப் பிரிந்த காதலி அவன் வரவை நினைந்து இரங்கியிருத்தல் நெய்தல். மருத நிலத்தில் விதைப்பு முடிந்து அறுப்புக் காலம் வரையில் மக்கள் பொழுது போக்குதற்கு ஏற்ற ஒழிவு உண்டு. அக்காலங்களில் காத

லருக்கிடையில் ஊடல் நேரும். இது பெரும்பாலும் தலைவன் பரத்தையருடன் நட்புக் கொண்டிருத்தலால் உண்டாகும்.

திணைக்குரிய மக்களின் பெயர்களிற் சில இக் காலத்தில் சாதிப் பெயர்களாக வழங்குகின்றன. குறவர் மறவர் பரதவர், இடையர் வேளாளர் என்பன அவற்றுட்

## திராவிடநாடு மிக முற்காலத்திலேயே நாகரிகம் பெற்றிருந்தது

மிக மிக முற்காலத்திலேயே திராவிடருடையநாகரிகம் மிக உயர்வடைந்திருந்தது. நாட்டின் செழிப்பும் வாணிகமும் செல்வத்தை வளர்க்கின்றன. மக்களின் குழப்பமில்லாத வாழ்க்கையும் செல்வம் வளர்வதற்கு மற்றொரு காரணம். வடநாட்டு மக்கள் அடிக்கடி அன்னிய படையெடுப்புக்களால் கலக்குண்டார்கள். அவர்கள் கையில் வாளைப் பிடித்துக்கொண்டு வீட்டையும் உறவினரையும் காக்கவேண்டியிருந்தது. அங்கு மக்களுக்கும் சொத்துக்கும் பாதுகாப்பு இருக்கவில்லை. தென்னாட்டு மக்களுக்கு இவ்வகைத் தொல்லை இருக்கவில்லை. நாட்டின் செல்வத்தை வற்றச் செய்யும் பெரியபோர்கள் தென்னாட்டில் நிகழவில்லை. தென் கடல்களில் கடற்கொள்ளைக்காரரும் காணப்படவில்லை. தரையில் அமைதி நிலவிற்று. அக் காலத்தில் அறியப்பட்டிருந்த கடலை அடுத்த நாடுகளோடு தமிழர் வாணிகம் புரிந்தனர். பாபிலோன், எகிப்து, ஆசிரியா முதலிய நாடுகள் இந்தியாவோடு வாணிகம் புரிந்தன. நாடு செல்வவளமடைந்தது. வடக்கே வாழ்ந்த மக்களைவிடத் தெற்கே வாழ்ந்த மக்கள் செல்வம்

# திராவிட இந்தியா

## தோற்றுவாய்

இந்திய மக்கள் வரலாற்றில் திராவிட மக்கள் வரலாறு மிக முதன்மையுடையது. இன்று இந்திய நாகரிகம் எனப் பெயர் பெறுவது ஆரிய திராவிட நாகரிகங்களின் கலப்பினுல் தோன்றியது. ஆரிய நாகரிகத்துக்கு முற்பட்டது திராவிட நாகரிகம். இதிற் சிறிதும் ஐயப்பாடு இல்லை. நீண்டகாலம் திராவிட நாகரிகத்தைப்பற்றிய செய்திகள் அறியப்படாது கிடந்தன; அதனுல் திராவிடரின் பண்பாட்டைக் குறித்த செய்திகள் வரலாற்றுசிரியர்களால் பற்பலவாறு திரித்துக் கூறப்படலாயின. இன்று தமிழரின் நாகரிகத்தைப் புலப்படுத்தும் சான்றுகள் பல கிடைத்துள்ளன. இச்சிறிய நூல் திராவிடரின் நாகரிகச் சிறப்புக்களைப்பற்றிக் கூறுகின்றது.

## திராவிடர் பிறப்பிடம்

"திராவிட மக்கள் அயல்நாடுகளிலிருந்து இந்தியாவின் வடபகுதிகளை அடைந்தார்கள். பின்பு ஆரியர் என்னும் புதிய சாதியினர் அங்கு வந்தனர். அவர்கள் திராவிடரை வென்று தெற்கே துரத்தினர். அவர்கள் தெற்கே வந்து வாழ்ந்தார்கள். அவர்களே தமிழர் எனப்படுவோர்." என மேல்நாட்டாசிரியர் சிலர், பல ஆண்டுகளின்முன் உண்மை அறியாது மயங்கி எழுதி வைத்தனர். அக்கொள்கை இன்று சிறிதும் ஏற்றுக் கொள்ளத் தக்கதாயிருக்கவில்லை. பள்ளிச் சிறுவர்களுக்கு வரலாறு எழுதும் ஆசிரியர் பலர் உண்மையல்லாத பழைய

கொள்கையைப் பின்பற்றி எழுதிவருவது வருந்தத்தக்கதே யாகும்.

திராவிட மக்கள் வெளிநாடுகளிலிருந்து வந்து இந்திய நாட்டை அடைந்தார்கள் என்று கூறுவதற்கேற்ற ஆதாரம் ஒன்றேனும் காணப்படவில்லை. பழைய கற்காலம் முதல் இரும்புக்காலம் வரையில் மக்கள் தொடர்பாகச் செய்து பயன்படுத்திய ஆயுதங்களும் பிறபொருள்களும் இந்திய நாட்டின் பல்வேறு இடங்களிற் கண்டு எடுக்கப் பட்டுள்ளன.[1]

திராவிட மக்கள் அயல்நாடுகளினின்றும் வந்தார்கள் என்று கூறுவோர்க்குத் துணையாயிருப்பது ஆப்கானிஸ் தானத்தின் ஓர் பகுதியில் தமிழுக்கு இனமுடைய பிராகூய் மொழி வழங்குவது. இற்றைக்கு ஆறாயிரம் ஆண்டு களின்முன் சிந்து ஆற்று வெளிகளில் திராவிடர் நாகரிகம் பரவியிருந்தது. அங்கு தமிழ் வழங்கிற்று. இம்மக்களின் தொடர்புடையவர்களே ஆப்கானிஸ்தானத்தில் தங்கி வாழ்ந்தார்கள். அவர்களின் சந்ததியினரே திராவிடத் தின் சம்பந்தமுடைய பிராகூய் மொழியை இன்றும் பேசி வருகின்றனர்.[2]

---

1. We have a continuity of culture from paleolithic to neolithic, from neolithic to megalithic and megalithic to iron age in South India—Origin and Spread of the Tamils—V. R. Ramachandra Dikshitar. M. A.

2. I ask what is the objection to state that a branch of Dravidians from South went to North and North-West and settled there? Diffusion of Dravidians in Rajaputana and Central India in prehistore times is seen from the dialects Villi and Santal prevalent today, bearing close affinity to Dravidian languages Add to this, the Mohenjo Daro script which is very probably Dravidian.—ibid pp. 10, 11.

திராவிட மக்கள் பழமைதொட்டே இந்திய நாட்டில் வாழ்ந்து வருகின்றார்கள். அவர்களின் பழைய நாடு குமரி முனைக்குத் தெற்கிலும் பரந்து கிடந்தது.

## நாகரிகத்தின் பழமை

மேற்கு ஆசியா எகிப்து முதலிய நாடுகளில் பழைய இடிபாட்டு மேடுகள் தோண்டி ஆராயப்பட்டுள்ளன. அங்கு கிடைத்த பழம் பொருள்களைக்கொண்டு அந் நாடுகளின் நாகரிகம் ஏழாயிரம் அல்லது எண்ணாயிரம் ஆண்டுகளுக்குமுற்பட்டதென ஆராய்ச்சியாளர் துணிந்துள்ளனர். மைசூரிலே சிற்றூல்ரக் என்னும் இடத்திலும் சிந்துவெளியிலும் செய்யப்பட்ட அகழ் ஆராய்ச்சிகளால் இந்திய நாட்டின் நாகரிகமும் அந்நாட்டு நாகரிகங்களை ஒத்த பழமையுடையதென அறியப்படுகின்றது. எகிப்து, மேற்கு ஆசியா முதலிய நாடுகளில் நாகரிகத்தைத் தோற்றுவித்தோர் அயல் நாடுகளினின்றும் சென்றவர்களாவர் என்றும், அவர்கள் இந்திய நாட்டினின்றும், சென்றார்கள் எனக் கொள்வதற்குப்பல ஏதுக்கள் உள்ளனவென்றும் சிறந்த மேற்றிசை ஆராய்ச்சி அறிஞர் பலர் புகன்றுள்ளார்கள்.[3]

---

3. If we take into consideration all these circumstances and examine them critically one has to assume that the authors of these early cultures in the East Mediterranean were emigrants from South India speaking Dravidian dialects· The language migrated and with it the peoples who spoke that language· So my humble thesis is that civilization of the future was borne not on the shores of the Mediterranean but on the coasts of the Indian peninsula and on the banks of its mighty rivers the Kaveri, Thambraparni, the Periyar and Amarovathi, not to speak of the Krishna, Godavari and Narbada—ibid p. 27.

## தமிழும் திராவிடமும்

இன்று தமிழரைக்குறிக்கத் திராவிடர் என்னும் பெயரும் வழங்குகின்றது. திராவிடம் என்னும் சொல்லைப் பற்றிப்பலர் பலவாறு ஆராய்ந்து கூறியுள்ளார்கள். திராவிடமென்பது தமிழ் என்னும் சொல்லின் உச்சரிப்பு வேறுபாடு என்பதே ஆராய்ச்சி அறிஞர் இறுதியாகக் கொண்ட முடிவு. இன்று திராவிடம் என்னும் சொல் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளு முதலிய மொழிக் கூட்டத்தைக் குறிக்க வழங்குகின்றது. திராவிடர் என்னும் பெயர் இம் மொழிக் கூட்டத்துக்குரிய மக்களைக் குறிக்கின்றது.[4]

## நிலத்திற்கேற்ப மக்கள் பண்பாடு அடைதல்

உலகில் மக்கள் வாழக்கூடிய இடங்கள் ஐந்து வகையின என்று பழந்தமிழர் கண்டனர். அவர்கள் அவ்வகை நிலங்களைத் திணைகள் என்றனர். திணை என்பது திட் அல்லது திண் என்னும் அடியாகப் பிறந்தது. நிலப்பரப்பு என்பது அதன் பொருள். திட் அல்லது திண்

4. The word Dravida is the name for the speakers of a group of South Indian languages - Tamil, Malayalam, Kanarese and Telugu. No stretch of imagination is required to believe that of them Tamil is the oldest dialect and in my opinion the parental dialect. Though a claim has been recently made for the ancientness of the Kannada tongue, still it is safe to assert that Malayalam, Kanarese and Telugu became cultivated languages only a thousand years ago, when the influence of Sanskrit language had reached its high water mark in the Peninsula. So the term Dravidian we can definitely say, originally stood for the Tamil language and its descendants ibid p. 14.

என்பதிலிருந்தே திட்டு, திட்டை, திடர், திண்ணை முதலிய சொற்கள் பிறந்தன. திண் என்பது வலிமையையுங் குறிக்கும். இடங்களின் சூழ்நிலைக்கேற்பவே மக்களின் திருத்தமும் வளர்ச்சியடைந்தது. தண்ணீரில்லாத வறண்ட மணற் பகுதி பாலை எனவும், மலைநாடு குறிஞ்சி எனவும், மலைநாட்டுக்கும் கீழ்நாட்டுக்கும் இடைப்பட்ட குறுங் காட்டு நிலம் முல்லையெனவும், ஆற்றோரங்கள் மருதமென வும், கடற்கரை நெய்தல் எனவும் வழங்கின. இவ்வகை நிலங்களும் தமிழ்நாட்டில் ஓரளவு உண்டு. மக்கள் தோன் றிய காலம் முதல் தமிழர் தென்னிந்தியாவில் வாழ்ந்துவரு கின்றார்கள். அவர்கள் ஒரு நிலத்தினின்று இன்னொரு நிலத்துக்குச் சென்று படிப்படியான சீர்திருத்தங்களை அடைந்தனர்.

## மலையும் மலைசார்ந்த நிலமும்

மக்கள் முதல்முதல்குடியேறி வாழ்ந்த இடம் மலை. மிக மிக நீண்ட காலம் மழையினாலும் பருவக்காற்றினாலும் தாக் குண்டதால் தேய்ந்துபோன சிறிய குன்றுகள் பல தென் னிந்திய பூமிகளிற் காணப்படுகின்றன. இம் மலைஇடங் களுக்குக் கீழே தண்டகம் என்னும் இருண்ட காடு இருந் தது. அங்கு சிங்கம், புலி, யானை, காட்டு எருமை, சிறுத்தை, மனிதனுக்கு அழிவைச் செய்யும் பூச்சி வகை கள் காணப்பட்டன. ஆதிகால மனிதன், வெய்யில், மழை, விலங்குகள் முதலியவைகளினின்று தன்னைக் காப் பாற்றிக்கொள்ளக் கூடிய குகைகள் மலையிடங்களிலிருந் தன. அவன் தண்ணீரைச் சேமித்துவைப்பதற்கு மண் பாத்திரங்களைச் செய்ய அறிந்திருக்கவில்லை. நீரூற்றுகள் வற்றிய காலத்தில் பாறைகளிலுள்ள குழிகளில் நீர் நிறைந் திருந்தது. அவன் அதனை கைகளால் அள்ளிப் பருகி

ஞன்; காலடியிற் கிடந்த கற்களை எடுத்து அவைகளி லிருந்து கோடரி, ஈட்டிமுனை, அரியும் கருவிகள், சுரண்டும் கருவி, முதலியவைகளைச் செய்யப் பழகிக்கொண்டான். இந்நிலையிலிருந்து மனிதனின் சீர்திருத்தம் வளர்வதா யிற்று. மிக முற்பட்ட திருத்த காலம் பழைய கற்காலம் எனப்படும். பழைய கற்கால நாகரிகத்தைக் காட்டும் கையினுற் செய்யப்பட்ட பொருள்கள் கடப்பா, நெல் லூர், வடஆற்காடு, செங்கற்பட்டு முதலிய இடங்களிற் கிடைத்துள்ளன.

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் பழங்கள் விதை கள் கிழங்குகளை உண்டு வாழ்ந்தனர். பருவகால மாறு தல்களால் இவ்வுணவுப் பொருள்கள், சிற்சில காலங்களில் அரிதிற்கிடைப்பவாயின. ஆகவே அவர்கள் ஊன் உண வையும் கொள்ளத்தொடங்கினர். அவர்கள் தற்காப்பின் பொருட்டு விலங்குகளோடு அதிகம் போராட வேண்டி யிருந்தது. அதனுல் அவர்கள் வேட்டை ஆடுவதில் திறமை பெற்றனர். ஆகவே தொடக்கத்தில் மனிதனின் தொழில் வேட்டையாடுவதாகவிருந்தது; அப்பொழுது அவர்கள் ஓரிடத்தில் தங்காது அலைந்து திரிந்தார்கள். உலகம் முழுமையிலும் கண்டெடுக்கப்பட்டுள்ள பழைய கற்கால ஆயுதங்கள் எல்லாம் ஒரே வடிவின. இதனுல் ஆதிகால மனிதன் உலகில் எங்கும் அலைந்து திரிபவனு யிருந்தானெனத் தெரிகின்றது.

குறிஞ்சி நிலச்சூழல், மனித சீர்திருத்தத்திற்கு அடிப் படையாகிய இரண்டு புதியவற்றைக் கண்டுபிடிக்கும்படி செய்தது. அவற்றுள் ஒன்று வில்லும் அம்பும், மற்றது நெருப்பு உண்டாக்குதல். மலைகளில் மூங்கில் அதிகம் வளர்கின்றது. மலையில் வாழும் மக்கள்

வளையுந்தன்மையை நோக்கி அறிந்தார்கள். அவர்கள் அதனைப் பிளந்து இருமுனைகளிலும் கொடியைக் கட்டி நீண்ட முட்களை அதில் வைத்து எய்யப் பழகினார்கள். இன்றும் மலைகளில் வாழும் மக்கள் ஒரே அம்பினால் ஒரு புலியைக் கொல்லும் திறமை பெற்றிருக்கிறார்கள்.

ஆதிகால மக்கள் மலையில் தீ உண்டாகி எரிவதைக் கண்டார்கள். மூங்கில் ஒன்றோடு ஒன்று உரோஞ்சுவதால் தீயுண்டாகின்ற தென்பதை அவர்கள் அறிந்தார்கள்; ஆகவே தாமும் இரண்டு தடிகளை ஒன்றோடு ஒன்றை ஒரோஞ்சித் தீ உண்டாக்கலாமென எண்ணினார்கள். தாம் வேட்டையாடிக் கொன்ற விலங்குகளின் இறைச்சியை வேகச் செய்யும் பொருட்டு அவர்கள் முதலில் நெருப்பைப் பயன்படுத்தினர்.

ஆடவர் வேட்டையாடச் சென்றார்கள். பெண்கள் காட்டிற் சென்று பழங்களைப் பொறுக்கினார்கள்; கிழங்குகளை அகழ்ந்தார்கள்; தாம் வாழிடங்களைச் சுற்றித் தானே விளைந்த மலை நெல் மூங்கிலரிசி முதலியவைகளையும் சேகரித்தார்கள். பெண்களின் அடுத்த கடமை குழந்தைகளை வளர்ப்பது. இவ்வகை நிலையிலிருக்கும்போது அவர்கள் வீடு அமைக்க அறியவில்லை. தென்னிந்திய வெப்ப நிலைக்கு வீடு வேண்டியதில்லை; மர நிழல்களும் மலைக்குகைகளுமே ஒதுக்கிடங்களாகப் பயன்பட்டன. மக்கள் தொடக்கத்தில் வீடுகளை உறைவிடத்தின் பொருட்டு அமைக்கவில்லை; தமது செல்வமாகிய உணவுப் பொருள்களைப் பத்திரப் படுத்திவைக்கும் பொருட்டு அமைத்தனர். பழைய கற்கால மனிதனுக்கு உணவைச் சேமித்து வைக்கும் தேவை உண்டாயிருக்கவில்லை. வீடு இல்லாமையாலும், அலைந்து திரியவேண்டிய இன்றியமையாமையாலும் வீட்

டில் தங்கி வாழ்வதாகிய உணர்ச்சி ஆடவரிடையே எழ வில்லை. ஆகவே தாயாட்சி முறையான வாழ்க்கை ஆதி யில் வளர்ச்சியடைவதாயிற்று.

இவ்வகையான வாழ்க்கையை இன்னொன்றும் ஊக்கி யது. முற்கால மனிதன் ஆடம்பரமான மணக்கிரியை களால் கட்டுப்பட்டிருக்கவில்லை. ஆடவரும் மகளிரும் காதலித்து மணந்தனர்; சில நாட்களின் பின் உறவினரை அழைத்து விருந்து இட்டனர். இதுவே முற் காலத் திருமணக் கிரியையாகவிருந்தது. திருமணம் என் றும் நிலையான தன்மை யுடையதாகவிருக்கவில்லை. தனிப் பட்ட சொத்து இன்மையும் நிலையான வீடு இன்மையும் தாயாட்சி முறையான வாழ்க்கைக்கு நீண்ட காலம் வாய்ப்பு அளித்தன.

தமது மேனியை அலங்கரித்துக் கொள்வதில் ஆட வருக்கும் மகளிருக்கும் விருப்பு உண்டு; இவ்விருப்புப் பெண் களுக்கு அதிகம். குறப்பெண்கள் ஓய்வு நேரங்களில் ஓடு களைப் பொறுக்கினார்கள்; அவைகளை மாலையாகக் கோத்து அணிந்தார்கள். அவர்களின் காதலர் வேட்டையாடுவதிற் கிடைத்த புலிநகம், புலிப்பல் போன்றவைகளைக் கொடுத் தார்கள். அவைகளையும் அவர்கள் கழுத்தில் அணிந்தார் கள். பிற்காலத்தில் இவையே தாலியின் வடிவாகமாறின. தென்னிந்தியப்பெண் தாலிதரித்தல் திருமணம் செய்து கொண்டமைக்கு அடையாளமாகும். பெண்களின் இன் னொரு அலங்காரம் தழைஉடை. தழைஉடை என்பது கொடியிற்கட்டிய தழைகளாலான உடை. இவ்வுடை உடுக் கும் வழக்கம் இன்றும் சில காட்டுச் சாதியினரிடையே காணப்படுகின்றது.

## மணலும் மணல்சார்ந்த இடங்களும்

மணலும் மணல்சார்ந்த இடமும் பாலை எனப்படும். இது மக்கள் வாழக்கூடிய இடத்தின் ஓர் உட்பிரிவில் அடங்கும். வேடன் காட்டுவிலங்குகளைத் துரத்திச் செல்லும்போது பாலைநிலத்தில் நிலையில்லாது சிலகாலம் தங்குவான். பாலைநிலத்தில் சிலகாலம் தங்குவோர் அல்லது அங்கு வாழ்வோர் மறவர் எனப்படுவர். மறம் வீரத்தை உணர்த்தும். இவர்[1] கள்ளர் எனவும் பட்டனர். பாலை நிலம் செழுமையற்றதாதலாலும் பாலைநில மக்கள் போர்த் தொழிலில் சிறந்தவர்கள் ஆதலினாலும் மறவரும் கள்ளரும் செல்வரையும் மற்றநிலங்களில் வாழும் வலியற்றவர்களையும் கொள்ளையிட்டு வாழ்வாராயினர். இதனால் மறம் என்பது கொடுமையையும் கள்ளர் என்பது திருடரையும் குறிக்க

## காடும் காடுசார்ந்த நிலமும்

குறிஞ்சி நிலத்தில் மக்கள் பெருகியபோது உணவு சுருங்கிற்று. அப்பொழுது மக்கள் அயலிலுள்ள முல்லை நிலத்திற்குச் செல்வாராயினர். அப்பொழுது அவர்கள் சீர்திருத்தத்தில் இன்னொரு படியை அடைந்தனர். எருமை, பசு, ஆடு, செம்மறியாடு போன்ற விலங்குகளை இவர்கள் பழக்கி வளர்த்தார்கள். அவர்கள் குறவராயிருந்தபோது நாய் பழக்கி வளர்க்கப்பட்டது. முல்லை நிலத்தில் ஆடுமாடுகள் விரைவிற் பெருகின. ஆகவே

1. கள்வர் என்னும் பெயர் வலியை உணர்த்தும்; கள் என்னும் அடியாகப் பிறந்தது - களிறு, (போர்க்)களம் முதலிய சொற்கள் கள் என்னும் அடியாகப் பிறந்தவை. மதுவைக் குறிக்கும் கள் என்பதற்கு வலியைத் தருவது என்பது பொருள். பி. தி. சீனிவாச ஐயங்கார்.

சொத்து உண்டாயிற்று. இதனால் குடும்பங்களும், குடிக ளும் தோன்றி வளர்ந்தன.

ஆடவரும் மகளிரும் ஒருவரை ஒருவர் காதலித்த லும், காதலின் அடையாளமாகக் காதலன் புலிநகம், இலையுடை முதலியவற்றைக் காதலிக்குக் கொடுத்துக் கிரியை இன்றி மணந்துகொள்வதுமாகிய மணம் களவு எனப்பட்டது. குறிஞ்சி நிலத்திற்றோன்றிய இவ்வகை மணங்கள் நின்றுபோயின. இப்பொழுது கற்பு ஒழுக் கம் தோன்றிற்று. காதலர் ஒருவரோடு ஒருவர் பழகுவ தன்முன் மணச் சடங்கு இயற்றப்பட்டது. இலைகளா லும் மலர்களாலும் அலங்கரிக்கப்பட்ட பந்தரின்கீழ் சுற றத்தினர் திரண்டிருந்து மணக்கிரியை நடத்தப்பட்டது.

சொத்துச் சேரத்தொடங்கியதும், கற்பு ஒழுக்கம் தோன்றியதும் சமூகம் தந்தை ஆட்சிமுறையாக வளர்வ தாயிற்று. தந்தையே ஆடுமாடுகளுக்குச் சொந்தமுடை யவனாயிருந்தான். நிலங்களைப் பிரித்தால் ஆடுமாடுகள் மேய்வதற்கு முடியாமல் போகும். ஆகவே கூட்டுக் குடும்ப வாழ்க்கை தோன்றிற்று. தந்தை ஆட்சியில் பெரிய குடும்பத்தலைவன் அரசன்போல் ஆயினான். இம் முறையில் அரசன் தோன்றினான். ஆட்சிமுறை முதலில் முல்லை நிலத்திலேயே தோன்றிற்று. கோன் என்பது பழைய தமிழ்ச்சொல். இது அரசனைக் குறிக்க வழங்கு கின்றது. ஆய்ச்சி என்னும் சொல் இடைச்சியையும் அரசியையும் குறிக்கின்றது.

மற்ற நாடுகளில் இடையரின் வாழ்க்கை இடம்விட்டு இடம் அலைந்து திரிவதாகவிருந்தது. தென்னிந்தியா செழிப்புடையதாயும் எல்லாக் காலங்களிலும் ஆடுமாடுக

ளுக்கு வேண்டிய உணவு கிடைக்கக்கூடியதாகவும் இருந்தமையால் தென்னிந்திய இடையருக்கு இடம்விட்டு இடம்செல்லவேண்டிய கட்டாயம் உண்டாயிருக்கவில்லை. ஆகவே தென்னிந்திய இடையரின் வாழ்க்கை ஓரிடத்தில் தங்கியிருப்பதாக அமைந்தது.

இடையர் ஆடு மாடுகளை மேய்ச்சல் நிலத்துக்கு ஓட்டிச் சென்றார்கள். மந்தைகள் மேயும்போது அவர்கள் மரநிழலில் தங்கியிருந்தார்கள்; பொழுதுபோக்கின் பொருட்டு மூங்கிற் குழலில் இனிய இராகங்களைப் பாடினார்கள். ஆடு மாடு மேய்ப்பவர்களில் ஒரு பிரிவினர் குறும்பர் எனப்பட்டனர். இவர்கள் மயிர் நீண்டு வளரும் குறும்பு ஆடுகளை வளர்த்தனர். குறும்பு ஆடுகளின் மயிரிலிருந்து கம்பளி நெய்யப்பட்டது.

## கடலும் கடல்சார்ந்த நிலமும்

இதற்கு அடுத்த படியில் கடற்கரை நிலம் மக்களால் குடியேறப்பட்டது. இங்கு வாழ்ந்த மக்கள் கரையை அடுத்த கடலில் மீன் பிடித்தார்கள்; பின்பு ஆழமான நீரிற் சென்றார்கள். கடற்கரையில் வாழ்வோர் பரதவர் எனப்பட்டனர். இவர்களின் தொழில்கள் மீன் பிடிப்பதும் மரக்கலஞ் செய்வதுமாயிருந்தன. மிகப்பெரிய மரக்கலங்கள் கட்டுமரங்களாயிருந்தன. இதன்பின் தோலால் மூடப்பட்ட கூடைகள் தோணிகளாகப் பயன்படுத்தப்பட்டன. நெய்தல் நிலத்தில் கிடைக்கும் முக்கிய பொருள்கள் உப்பும் மீனும். பரதவர் இவைகளை மற்ற நிலங்களுக்குக் கொண்டு சென்று பிற உணவுப் பொருள்களுக்குப் பண்டமாற்றுச் செய்தனர். பரதவர் இவ்வாறு வணிகராயினர். அவர்கள் தமது பண்டங்களைப் பொதி

மாடுகளில் ஏற்றிச் சென்றனர். இந்தியப் பொருள்களை ஆபிரிக்கா, அராபியா முதலிய மேற்கு நாடுகளுக்கும், கிழக்கே மலாயா, சீனு முதலிய நாடுகளுக்கும் ஏற்றிச் சென்ற கடலோடிகள் தோன்றினார்கள். கடற்கரை நிலங்கள் சில பயிர்ச் செய்கைக்கு ஏற்றவாயிருந்தன. அங்கு பயிரிடப்பட்டது.

## வயலும் வயல்சார்ந்த நிலமும்

மருத நிலமக்கள் நிலத்தை உழுது பயிரிட்டார்கள். ஆற்றோரங்களில் வாழ்ந்த மக்கள் ஆற்று வெள்ளத்தை வாய்க்கால் வழியாக வயல்களுக்குப் பாய்ச்ச அறிந்திருந்தார்கள். இவ்வாறு மிக மிக முற்காலத்திலேயே பயிர்ச் செய்கை தென்னிந்தியாவில் மிக வளர்ச்சியடைந்திருந்தது. ஆற்றுப் பள்ளத்தாக்குகளுக்கு அப்பால் பஞ்சு விளையும் நிலம் இருந்தது. புதிய கற்கால மக்கள் பஞ்சிலிருந்து நூல் நூற்கவும் நூலால் ஆடை நெய்யவும் அறிந்திருந்தார்கள்.

இப்பொழுது மக்கள் மரங்களால் வீடு கட்டினார்கள். தேவைக்கு அதிகமான தானியம் வீடுகளில் சேமித்து வைக்கப்பட்டன. மற்ற நிலங்களிலுள்ள உப்பு, மீன், வெண்ணெய் தயிர் கல் ஆயுதங்கள் போன்றவைக்குத் தானியம் பண்டமாற்றுச் செய்யப்பட்டது. மருத நிலத்தில் பண்டமாற்றுச் செய்யமுடியாத பண்டங்களை வெளியே கொண்டு செல்லவேண்டிய அவசியம் உண்டாயிற்று. பண்டங்களைக் கொண்டு செல்வதற்கு வண்டிகள் செய்யக் கண்டு பிடிக்கப்பட்டது. உணவுக்குப் பயன்படக் கூடிய மரஞ்செடிகளும் கண்டறியப்பட்டன. இவ்வாறு திராவிடநாகரிகம் இந்தியநாட்டிலேயே தோன்றி வளர்ச்சியடைந்தது. இந்தியாவின் அயலிலிருந்து நாகரிகம் இந்தி

யாவை அடைந்ததென்பதற்கு ஆதாரம் சிறிதும் காணப் படவில்லை.[1]

## பேச்சு

சமையலும், உடையும் அல்லாத இன்னொன்றும் அறியப்பட்டது. அது பேச்சு. பேச்சு இசை சம்பந்தப் பட்டது அல்லது இசை சம்பந்தப்படாததாக இருக்க லாம். பாடலுக்கு முன் பேச்சு இருந்ததெனப் பலர் கருதுகின்றனர். ஆதியில் பகுதி இசை சம்பந்தமும், பகுதி இசை சம்பந்தமில்லாததுமாயிருந்த பேச்சின் வேறு பாடே பாடலும் வசனமும் என வேறு பலர் கருதுகின்ற னர். இதனை நன்கு அறிந்துகொள்ள முடியவில்லை. இலக் கிய வளர்ச்சியில் உரை நடைக்கு முற்பட்டது பாடல் எனத் தெரிகின்றது. பண், பாண் என்பது இசையின் பகுதிக்குப் பெயர். பண் என்பதிலிருந்து பாடு, பாட்டு முதலிய சொற்கள் எழுந்தன. பாடுதல் தமிழரின் ஆதி காலப் பொழுது போக்குகளில் ஒன்று. பாணர் தொடக் கத்தில் பாடகராயிருந்தனர். நாகரிகம் வளர்ந்தபோது அரண்மனையில் அரசாங்க பாடகர் இருந்தனர். தமிழர் நாகரிகம் வளர்ச்சியுற்றிருந்த காலத்தில் பாணர் அரசரின் நண்பரும் அவருக்கு ஆலோசனை கூறுவோருமாயிருந்தனர்.

---

1....whoose growth in South India is evidenced by the presences of the artifacts of the palaeolithic neolithic and early iron ages throughout the country, and is traceable in the earliest strata of Tamil language and literature, show us that the growth of civilization in the Tamil land is entirely due to geographical causes operating *in situ* and not to historical events such as incursions of foreigners

—Environments and culture—P. T. S Aiyengar.

## சமயம்

மனிதன் ஆயுதம் செய்யும், உணவைச் சமைக்கும், உடை அணியும், பேசும் விலங்காக மாத்திரம் இருக்கவில்லை; சமயமுடைய விலங்காகவும் வாழ்ந்தான். அவன் தான் விரும்பியவைகளைப் பெறவும், தன்னை அச்சுறுத்தும் தீமைகளைப் போக்கவும் வலிய ஆற்றலை வேண்டிக் கொள்ளும் வழிகளையும் அறிந்திருந்தான். அவ்வழிகள் மந்திர வித்தை தொடர்பான கிரியைகள். அவை விருந்து, பாட்டு, கூத்து வடிவிலிருந்தன. பிற்காலத்தில் விருந்து பாட்டு கூத்து என்பன வெவ்வேருகப் பிரிக்கப்பட்டன. இடங்களுக்கேற்ப ஒவ்வொரு நிலத்திலும் தெய்வங்களும் கிரியைகளும் தோன்றின.

பழைய தமிழ் இலக்கியங்கள் மக்களின் வாழ்க்கையைக் கண்ணுடிபோல் காட்டுகின்றன. பழைய தமிழ் இலக்கியங்கள் பெரும்பாலும் மறைந்துபோயின. வாணிகம், ஆட்சி, தொழில், ஆட்சி முறைகள் கையாளப்பட்டன. இலக்கியங்கள் பெரும்பாலும் மனப்பாடஞ் செய்யப்பட்டுவந்தன. பழைய இலக்கியங்கள் பல இறந்து போயின என்பதற்குத் தொல்காப்பியப் பொருளதிகாரத்துக்கு உரை எழுதிய பழைய ஆசிரியர்கள் துறைகள் பலவற்றுக்கு ஏற்ற மேற்கோள் காட்டமுடியாமல் இருந்தமையே சான்ருகும். இப்பொழுது கிடைத்துள்ள பழைய இலக்கியங்கள் மக்களின் வாழ்க்கை முறைகள் அவர்கள் வாழ்ந்த நிலங்களுக்கேற்பத் தோன்றி வளர்ச்சியுடைந்தன என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றன.

## பாடல்கள்

தமிழ்நாடு நில அமைப்புக்கேற்பப் பிரிக்கப்பட்டிருந்த காலத்தில் பாடல்கள் தோன்றின. ஒவ்வொரு நிலத்திலும் அந்நிலத்தின் வாழ்க்கைக் கேற்ற பாடல்கள் எழுந்தன. ஆகவே திணை என்பது குறித்த நிலத்துக் குரிய பாடல் வகையைக் குறிப்பதாயிற்று. மனிதனின் காதல், போர் என்பவைகளே புலவர் பாடுதற்கு ஏற்ற கருத்துக்களாகக் கொள்ளப்பட்டன. ஆகவே பாடல்கள் இரு வகைப்பட்டன. அகத்திணை, புறத்திணை என்பன அவற்றின் பிரிவுகள். அகம் என்பது காதலுடைய இருவர் மாத்திரம் உணர்ந்து அனுபவிக்கக் கூடியது; புறம் மற்றவரோடு கலந்து 'பங்குபற்றத் தக்கது. ஐந்து நிலங்களுக்குமுரிய காதற் செயல்கள் ஐந்து எனக்கொள்ளப்பட்டன. குறிஞ்சி நிலத்துக்குரியவை காதலர் ஒருவரை ஒருவர் கண்டு காதலித்து உடன் மணத்தல், மலைக் காட்சி முதலியன. ஆடவரும் மகளிரும் தனித்தனியே எதிர்ப்பட்டு காதலிப்பதற்கு ஏற்ற இடம் மலையாதலில் கூடலும் கூடல் நிமித்தமும் குறிஞ்சி நிலத்துக்கு உரிப்பொருளாகக் கொள்ளப்பட்டன.

காதலன் காதலியை சுரவழியே பெண் வீட்டார் அறியாது கொண்டேகுதல், காதலன் காதலியை விட்டுப் பிரிந்து செல்லுதல் போன்ற பொருள்களைப் பாலைப் பாடல்கள் கூறுகின்றன. பிரிந்து சென்ற காதலன் வருந்துணையும் ஆற்றியிருப்பதாகிய செயலைக் கூறுவது முல்லை. தலைவனைப் பிரிந்த காதலி அவன் வரவை நினைந்து இரங்கியிருத்தல் நெய்தல். மருத நிலத்தில் விதைப்பு முடிந்து அறுப்புக் காலம் வரையில் மக்கள் பொழுது போக்குதற்கு ஏற்ற ஒழிவு உண்டு. அக்காலங்களில் காத

லருக்கிடையில் ஊடல் நேரும். இது பெரும்பாலும் தலைவன் பரத்தையருடன் நட்புக் கொண்டிருத்தலால் உண்டாகும்.

திணைக்குரிய மக்களின் பெயர்களிற் சில இக் காலத்தில் சாதிப் பெயர்களாக வழங்குகின்றன. குறவர் மறவர் பரதவர், இடையர் வேளாளர் என்பன அவற்றுட் சில.

## திராவிடநாடு மிக முற்காலத்திலேயே நாகரிகம் பெற்றிருந்தது

மிக மிக முற்காலத்திலேயே திராவிடருடையநாகரிகம் மிக உயர்வடைந்திருந்தது. நாட்டின் செழிப்பும் வாணிகமும் செல்வத்தை வளர்க்கின்றன. மக்களின் குழப்பமில்லாத வாழ்க்கையும் செல்வம் வளர்வதற்கு மற்றொரு காரணம். வடநாட்டு மக்கள் அடிக்கடி அன்னிய படையெடுப்புக்களால் கலக்குண்டார்கள். அவர்கள் கையில் வாளைப் பிடித்துக்கொண்டு வீட்டையும் உறவினரையும் காக்கவேண்டியிருந்தது. அங்கு மக்களுக்கும் சொத்துக்கும் பாதுகாப்பு இருக்கவில்லை. தென்னாட்டு மக்களுக்கு இவ்வகைத் தொல்லை இருக்கவில்லை. நாட்டின் செல்வத்தை வற்றச் செய்யும் பெரியபோர்கள் தென்னாட்டில் நிகழவில்லை. தென் கடல்களில் கடற்கொள்ளைக்காரரும் காணப்படவில்லை. தரையில் அமைதி நிலவிற்று. அக் காலத்தில் அறியப்பட்டிருந்த கடலை அடுத்த நாடுகளோடு தமிழர் வாணிகம் புரிந்தனர். பாபிலோன், எகிப்து, ஆசிரியா முதலிய நாடுகள் இந்தியாவோடு வாணிகம் புரிந்தன. நாடு செல்வவளமடைந்தது. வடக்கே வாழ்ந்த மக்களைவிடத் தெற்கே வாழ்ந்த மக்கள் செல்வம்

படைத்திருந்தனர். கடற் பயணங்கள் தென்மேற்கு இந்தியாவுக்கும் பாபிலோனுக்கு மிடையில் ஒழுங்காக நடைபெற்றது. மரக்கலமோட்டும் மாலுமிகள் திராவிட மக்களாகவிருந்தனர். தந்தம், குரங்கு, மயில் போன்றவைகளின் தமிழ்ப் பெயர்கள் மேற்குத் தேசங்களில் வழங்கின. நிலம் செழிப்புற்றிருந்தது. கனிகளில் பொன் அரிக்கப்பட்டது. வைரம், முத்து, பவளம் முதலியவும் அதிகம் கிடைத்தன. தேக்கு, சந்தனம் முதலிய மரங்கள் மேற்குத் தேசங்களுக்கு ஏற்றப்பட்டன. தமிழில் காணப்படும் நாடு ஊர் என்னும் சொற்கள் தமிழரின் பழைய பண்பாட்டை உணர்த்துவன. நாடு என்னும் சொல் நடு என்னும் அடியாகப் பிறந்தது. பலவகை மரஞ்செடிகளை நட்டு உண்டாக்கும் இடம் நாடு எனப்பட்டது. ஊர் என்பதற்கு வயல் சூழ்ந்த இடம் என்பது பொருள். ஊர் என்பது உழு என்னும் அடியாகப் பிறந்தது. ஊர் என்பது உழுதலை உணர்த்தும். முற்காலத்தில் நாட்டைப்பற்றியும் ஊரைப் பற்றியுமுள்ள தமிழருடைய கருத்து இதுவாகும். பழைய சாலதியாவின் தலைநகர் [5]ஊர்எனப்பட்டது. உரோமரின் நகரைக் குறிக்கும் பெயர் ஊர்ப்ஸ். இவை ஊர் என்னும் தமிழ்ச்சொல் சம்பந்தமானவை. நாடு என்பதற்கு எதிர்ச் சொல் காடு. காடு என்பதற்குக் கடத்தற்கு அரியது என்பது பொருள். காட்டைக் கெடுத்துப் பயிரிடும் நிலம் நாடு எனப்பட்டது.

இவ்வாறு திராவிடரின் நாகரிகம் இத் தமிழ் நாட்டிலேயே படிப்படி வளர்ச்சியடைந்துள்ளது என அறிந்து கொண்டோம். இனித் தமிழர் நாகரிகத்தின் சிறப்பு இயல்புகளை தனித் தனி எடுத்துக் கூறுவோம்.

5. The very name ur shells like a pukka Tamil name—ibid.

## நாகரிக மடைந்த திராவிடர் தொலைவிடங்களிற் சென்று குடியேறுதல்

சூழ்நிலைக்கேற்ப மக்கள் எவ்வாறு நாகரிக வளர்ச்சி பெற்றார்கள் என்பதை விளக்கியுள்ளோம். இன்று தென்னிந்திய மக்கள் இலங்கை, மலாயா, மொரிசஸ், தென்னாபிரிக்கா முதலிய நாடுகளிற் குடியேறி வாழ்ந்து வருகின்றனர். மிகப் பழங்காலத்திலேயே திராவிட மக்கள் ஆபிரிக்கா மேற்குப் பாரசீகம், மலாயா, கம்போதியா, சுமத்திரா, யாவா, சீனமுதலிய பல நாடுகளிற் சென்று குடியேறி வாழ்ந்தார்கள். இந் நிகழ்ச்சியை வலியுறுத்தும் சான்றுகள் பல இன்று கிடைத்துள்ளன.

“பண்டைநாளிலே சீரும் சிறப்பும் எய்தியிருந்த மிசிரம் என்னும் எகிப்து நாட்டினும், பாரசீகக் கடற்கரையிலிருந்து அழிந்துபோன சுமேரு (Sumeria) நாட்டினும், சோழர் குடியேறினமையினாலே சோழதேயம் என்னும் பெயரினை எய்திப் பிற்காலத்திலே மொழிச் சிதைவினாலே சாலதேயா (Chaldea) என வழங்கப்பட்ட தொல்பதியிலும் சோழர் குலத்தார் கலத்திற் சென்று வெற்றிபெற்றுத் தமது ஆணை செலுத்திய கிரேத்த (Crete) தீவிலும் அதற்கணித்தாகிய யவனபுரத்திலும் (Greece) உரோமர் வருவதற்குமுன் பழைய இத்தாலி (Italy) தேசத்திலும் ஐபீரியாஎனப்பட்ட பழைய ஸ்பெயின் (Spain) தேசத்திலும் பிறவிடங்களிலும் தமிழ்க்குலத்தார் வாழ்ந்து நாகரிகம் பரப்பினார்களென மேற்றிசை அறிஞர் ஆராய்ச்சியாற் கண்டு வெளியிட்டிருக்கின்றனர்........சிந்துநதி தீரத்திலே பாண்டிய மன்னர் ஆளுகையிலே மீனாடு என்னும் பெயரோடு திகழ்ந்ததும் பின்னாளிலே ‘இறந்தோர் மேடு’ என்னும் கருத்துடைய முகஞ்சதரை (Mohonjo Daro) என்

னும் பெயரெய்தியதுமாகிய நாட்டிலே மிதுனராசியானது யாழ் என்னும் பெயரினால் வழங்கப்பட்டு இணையாழுருவத்திலே குறியீடு செய்யப்பட்டதென அறிஞர் கூறுவர்.

"மணிமலர் என்னும் கட்டுரைத் தொகுதியினுள்ளே பண்டைத்தமிழர் பெருமை என்னும் உரையினை எழுதிய சென்னைப் பல்கலைக் கழகத்து வரலாற்றுப்பகுதி ஆசிரியர் வி. ஆர். இராமசந்திர தீட்சிதரவர்கள், 'தென்னாட்டிலிருந்து தமிழ் நாகரிகம் உரோமா புரிக்கும், கிரேக்க நாட்டிற்கும் பரவியது. இன்னும் தக்கண பீடபூமியைச் சேர்ந்த வேட்டுவர் * (கிராதர்) என்ற குறிஞ்சிநில மக்கள் யவன தேசத்திற்குச் சென்று தங்கள் அரசை நிலைநிறுத்தித் தங்கள் பெயரையும் அந்நாட்டிற்குக் கொடுத்தார்கள். இதுவே கிரீட் (Crete) தேசம். இதன் நாகரிகத்துக்கும் தமிழர் நாகரிகத்துக்கும் ஒப்புமை மிகுதியாயுள்ளது.' என எழுதியிருக்கின்றார்கள். வில்லவர் என்னும் சேரர்பெயரை 'hunters' என மேனாட்டார் மொழிபெயர்க்க அது

* Elsewhere I have suggested that the Kirata tribes of south India might have been the people who were responsible for the Cretan civilization and Crete derived its name probably after this tribe - ibid p. 49.

The term Elam in Mesopotamia is suggestive and shows that to be a name given possibly by the emigrants from Ceylon who settled there and were responsiple for the growth of the Town. For is not Ceylon known as Ilam ((ஈழம்) in literature and epigraphy? The people of Elam were non Semitic and closly related to Sumerian culture. Their language was agglutinative but did not belong to the group of Alarodian like the Sumer tongue. In the same way Caria adjoining Lycia was very probobly Cera after a settlement from Kerala—ibid p.-39

திரும்பவும் தமிழிற்கு மொழிபெயர்க்கப்பட்டு வேட்டுவர் என அமைவது இயல்பு. ஆதலினாலே தக்கிண பீடபூமி யைச் சேர்ந்த வேட்டுவர் என்ற குறிஞ்சி நிலமக்கள் எனத் தீட்சிதரவர்கள் உரையிலே குறிக்கப்பட்டோர் வில்லவரா கிய சேரர் குலத்தினரே என்பது தெளிவாகின்றது. சிலப் பதிகாரத்திலும் பதிற்றுப் பத்திலும் காணப்படும் சேரர் மெய்க்கீர்த்தி இவ்வுண்மையினை நிலைநிறுத்துகின்றது. சேர நாடு கேரளம் எனத்திரிவு பட்டதுபோலச் சேரர்தீவு 'க்ரீத்' ஆயிருக்கலாம். தமிழ்நாட்டுவேந்தர் யவனர்களைத் தமது கோட்டைவாயில்களிலே காவலாளர்களாக வைத்திருந்த செய்தியும் உரோமாபுரி வேந்தனாகிய ஆகஸ்டஸ் மன்ன னுக்குப் பாண்டியன் தூதனுப்பிய செய்தியும் பிறவும் ஆதாரமாகத் தீட்சிதரவர்கள், 'மத்தியதரை நாகரிக மென்று இப்போது வழங்கப்படுவது தென்னிந்தியநாகரிகம் என்று துணிவாய்ச் சொல்லலாம்'* என்று முடிவு கூறு கின்றார்"[6]

## உலகின் பெரும் பகுதியில் திராவிடம் வழங்கியதற்குச் சான்று

மொகஞ்சதரோ அரப்பா முதலிய சிந்துவெளி அழி பாடுகளில் கிடைத்துள்ள முத்திரைகளில் அக்காலத்து

---

*We therefore conclude that the so called Mediterranean race had its origin in peninsulur India, which was a part of the original Dravidian home which was in the submerged contenent and connected south India with Africa, when the Indo Gangetic basin had not probably been formed. So the Dravidian element is not to be found in Indian culture alone but is largely traceable in Cretan, Aegean, Sumerian, Babylonian, Egyptian, Polynesian and other cultures of ancient world-ibid-p. 29

6. யாழ்நூல்—ப, 26,49 விபுலானந்த அடிகள்,

வழங்கிய எழுத்துக்கள் பொறிக்கப் பட்டுள்ளன. அவ் வகை எழுத்துக்கள் ஹைதராபாத்து, திருநெல்வேலி முத லிய விடங்களிற் கண்டுபிடிக்கப்பட்ட வரலாற்றுக் காலத் திற்கு முற்பட்ட மட்பாண்டங்களிற் பொறிக்கப்பட்டுள் ளன. இலங்கையிலே கேகாலையிலுள்ளமலை ஒன்றிலும் இவ்வகை எழுத்துப் பொறிக்கப்பட் டிருப்பதை ஹெரஸ் பாதிரியார் குறிப்பிட்டுள்ளார். மொகஞ்சதரோ எழுத்துகளை மிக ஒத்த எழுத்துகள் தென்னமெரிக் காவுக்கு அண்மையிலுள்ள ஈஸ்ரர் தீவுகளிற் காணப் பட்டன. எகிப்து, மேற்கு ஆசியா, சின்ன ஆசியா, கிரேத்தா, முதலிய நாடுகளில் வழங்கிய பழைய எழுத்து களுக்கும் மொகஞ்சதரோ எழுத்துகளுக்கும் ஒற்றுமை இருப்பதைப் பழைய எழுத்து ஆராய்ச்சியாளர் காட்டி யுள்ளனர். இவ்வெழுத்துக்களை எல்லாம் நன்கு ஆராய்ந்த ஹெரஸ் பாதிரியார் பழையசீனம், சுமேரியம், பழையஎல் லம், பழைய அராபி, அசோகன், பிராமி, மினோவன், பழைய எகிப்தியம் இலிபியன் எற்றூஸ்கன் எழுத்துக் களெல்லாம் பழைய திராவிட எழுத்திலிருந்து தோன்றி யவை எனக்கூறியுள்ளார். மேற்குஆசிய மினோவ மொகஞ் சதரோ ஈஸ்டர்தீவு எழுத்துகள் எல்லாம் ஒரே தொடக்கத் தைச் சேர்ந்தனவென்றும் அவை அவற்றைப் பயன் படுத் திய மக்களின் போக்கின்படி வெவ்வேறு வகையில் வளர்ச்சி யடைந்தன என்றும் சர்டயான் மார்சல், பேரா சிரியர் லாங்கடன் ஜி. ஆர். ஹன்டர் போன்ற ஆராய்ச்சி வல்லார் கருதினர்கள். இக்கொள்கை நாள் வீதம் வலி யடைகின்றது. ஒட்டுச் சொற்களுடைய மொழிகள்

பெரும் பாலும் திராவிட மொழியினின்றும் பிறந்தன வெனக் கூறலாம்.[1]

மொகஞ்சதரோ அகழ் ஆராய்ச்சி அறியப்படுதற்குப் பல ஆண்டுகளின் முன்னரேயே பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள்,

> "சதுமறை ஆரியம் வருமுன் சகமுழுது நினதாயின்
> முதுமொழிநீ யநாதியென மொழிகுவதும் வியப்பாமே"

எனக் கூறியது மிக வியக்கத்தக்கது. தமிழ்ப் பற்று மிக்குடையவராய் விளங்கிய விருதை சிவஞானயோகிகள் இற்றைக்கு முப்பத்துமூன்று ஆண்டுகளின்முன் கூறியுள்ளது வருமாறு:

> "திருமலர் மணமென வொருமையின் மல்கி
> எண்ணில் பொழிற்பயிர் பண்ணிக் காக்கும்
> ஒப்பில் பெருமை மெய்ப்பொரு ளன்பு
> பாங்கி னிலைபெற் றோங்குந் தமிழகத்
> தாறறி வுடைமைப் பேறுறு மக்கள்
> முன்னர்த் தோன்றி மன்னிக் கெழுமி
> இமிழிய லொலிசார் தமிழ்மொழி பேசி
> மண்ணிற் பலவிட நண்ணிக் குடியிருந்
> தவ்வவ் விடத்துக் கொவ்விய வண்ணம்
> கூற்று நடையுடை வேற்றுமை யெய்தி
> பற்பல வினப்பெயர் பெற்றுப் பெருகினர்.
>
> * * * *
>
> முதலிடைக் கழக முன்னீர் கொள்ளப்
> படுதலி னிந்தியப் படியின் வளம்வவி
> அயலுட் டவரீ ராயிர மாண்டாப்
> படையெடுத்துத் துன் புறுத்திய படியால்
> நூல்களு மவற்றி னுண்ணிய வழக்கும்
> அருகி மறைந்தன வாதலின்"

1. The linguistic affinity between Somali language and Tamil is remarkable. A distinct contribution of the ancient Dravidian to world culture is the Dravidian tongue. The group of agglutinative dialects with a

## இந்தியநாடு முழுமையிலும் வாழ்ந்த மக்கள் திராவிடர்

இதுவரையிலும் அகழ் ஆராய்ச்சியினால் அறியப்பட்ட பழைய நாகரிகங்களுள் இந்திய நாகரிகமே மிகப் பழமை உடையது. சிந்துவெளி நாகரிகத்தின் காலம் கி. மு. 3500 என்று சொல்லப்படுகின்றது. சிந்துவெளி நாகரிக காலத்தில் இந்தியா முழுமையிலும் ஒரேமொழியை வழங்கிய ஒரே இனமக்கள் வாழ்ந்தார்கள். அம்மக்கள் திராவிடர் எனப்படுவர். ஆரியமக்கள் கி. மு. இரண்டாயிரத்தில் அல்லது அதற்குப்பின் இந்தியநாட்டை அடைந்தார்கள். அக்காலத்தில் வடநாடு முழுமையிலும் திராவிடமொழி வழங்கிய தென்பதற்குச் சான்று ஆரிய மக்களின் பழைய பாடல்களாகிய வேதங்களில் திராவிடச் சொற்கள் பல இருப்பதும் பிறவுமென ஆராய்ச்சியாளர் நன்கு ஆய்ந்து நிறுவியுள்ளார்கள்.[1]

---

few exceptions look to the ancient Tamil language primarily as their parent. Can we say that the service of Dravida was to give the tongue to the tongueless ?
—Origin and spread of the Tamils P. 39

1. Dialects of the same family of languages were spoken throughout India, except in the Vindyan regions, in the Neolithic age ; and that is what has been called Dravidian family-Stone age in India p 43. P. T. S. Ayangar.

2. It will thus appear that the Dravidian speakers were the latest occupants of India before the Indo-Europeans arrived...It will thus appear that the civilization of the Indus valley was associated with speakers of the Dravidian languages... Lastly the Brahmi script of later Vedic civilizations is itself traced to Indus valley pictographs...Thus the non Aryan of the Rigveda may be in a sense taken to the non Aryan responsible for the Indus civilization-Hindu civilization-pp 38, 30. Radha Kumud Mukerji

ஆரியர் வருகைக்குப் பின்பே இந்திய நாட்டில் வெவ்வேறு இன மக்கட் கலப்பும் மொழிக்கலப்பும் உண்டாயிற்று. கி. மு. இரண்டாயிரத்தில் வடக்கே இமயத்துக்கும் தெற்கே குமரியுக்கும் இடைப்பட்ட பெரு நிலப்பரப்பு திராவிட நாடாக விளங்கிற்றென தெளிதில் அறியக் கிடக்கின்றது.

## புதிய மக்களின் வருகையால் உண்டான மாறுதல்கள்

புதியமக்களுக்கும் வடக்கே வாழ்ந்துகொண்டிருந்த திராவிடமக்களுக்குமிடையில் போர்கள் நிகழ்ந்தன. ஆரியருடைய வேதபாடல்களால் அக்காலத்தில் திராவிடர் உயர்ந்த நாகரிகம் பெற்றுவிளங்கினார்கள் எனத்தெரிகின்றது.[1] நாகரிகத்தில் உயர்நிலை அடைந்திருந்த திராவிடரை வெல்வது ஆரியமக்களுக்கு இயலாததாகவிருந்தது. நாளடைவில் இருசாதியாருக்கிடையில் திருமணக்கலப்புகளால் தொடர்புகள் உண்டாயின.[2] திராவிடப் பெண்களை ஆரிய ஆடவரும் ஆரியப்பெண்களைத் திராவிட ஆடவரும் மணந்தனர். திராவிடருடைய சமூகம் தாயாட்சி முறையினது. ஆரியருடைய சமூகம் தந்தைஆட்சி முறையினது. திராவிடப்பெண்கள் மூலம் ஆரிய ஆடவருக்குப் பிறந்தவர்கள் தந்தை ஆட்சி முறைப்படி ஆரியர் எனப்பட்டனர்.

---

1. He had to-subdue or assimilate the aboriginal element. But the overthrow of the black skin was no means an easy task for the Aryan ; The non-Aryan of the Rigveda was fully fortified in the stronghold of his own civilization which was meterially quite advanced. Remnants of this civilization are traced in the ruins of cities unearthed at Harappa and Mohenjo-Daro—ibid p 69.

2. There was also inevitably at work a process of fusion between the Aryan and the non Aryan by inter-marriage or by alliance—Hindu civilization - ibid.

ஆரியப்பெண்கள் மூலம் திராவிடத் தந்தையாருக்குப் பிறந்தவர்கள் திராவிடர் தாயாட்சி முறைப்படி ஆரியர் எனப்பட்டனர். இவ்வகையான கலப்புப் பல நூற்றாண்டு களாக நிகழ்ந்தது. விந்தியமலைக்கு வடக்கே உள்ள மக்கள் தம்மை ஆரியர் எனக் கூறிக்கொள்வாராயினர். ஆனால் அவர்களிடத்தில் ஆரியக் குலத்தினருக்குரிய குணங் குறிகள் மிகச்சிறிதே காணப்பட்டன.[3]

மக்களிடை கலப்பு உண்டானபோது மொழிகளும் கொள்கைகளும் கலப்பவாயின. திராவிட மொழிச் சொற்கள் பல திரித்து வழங்கப்பட்டன. இவ்வாறு வழங் கப்பட்ட மிகப்பல சொற்கள் இன்று வடமொழியிற் காணப்படுகின்றன. அச்சொற்களுக்கு மூலம் அறியமுடியா மல் இருக்கிறது. இந்து ஆரியமொழிக்கு இனமுடையதாக ஐரோப்பிய நாடுகளில்வழங்கும் ஆரியமொழிகளில் இச் சொற்கள் காணப்படவில்லை.[1]

---

3. The Aryan ethnical type which had closely intermingled with the non-Aryan population before the caste system was fully developed never constituted more than a small fraction even of the population of the north - A short history of India Havell p. 29.

But as Dravidian society was matriarchal such intermarriages, with or without consent always exerted powerful influence in the Aryanisation of India, for in the course of time all the highest Dravidian families, both in the north and south claimed Aryan descent on-their mother's side and adopted Aryan custiom and religion - ibid p 31

1. As a rule however the Aryan in addopting a Dravidian word changed it considerably in order to suit it to their tongue and whenever such a word was imperfectly understood and negligenlty reproduced the change became still greater.—Kannada Eng. Dictionary - p XV - Rev E. Kettel

புதிதாக வந்த மக்களைவிட வடக்கே வாழ்ந்துகொண்டிருந்த திராவிட மக்கள் பலர். மக்கட் கலப்பினால் சில மாற்றங்கள் உண்டாகி மொழி மாறுபட்டபோதும் வாழ்க்கை முறையில் அவர்கள் திராவிட சமூகத்தினர் போலவே காணப்பட்டனர். புத்தர் காலமக்கள் வாழ்க்கையைப்பற்றி ரைஸ்டேவிட்ஸ் என்பார் கூறியிருப்பது இதனை வலியுறுத்துகின்றது.[2]

## வடநாட்டில் வழங்கியமொழி சமக்கிருதமா?

வடநாட்டிலே மக்கள் வழங்கிய மொழி சமக்கிருதமென்று பலர் நினைக்கிறார்கள். இக்கருத்துத் தவறுடையது. சமக்கிருதம் ஒருபோதும் பேச்சுமொழியாக விருக்கவில்லை. அது குருமாருக்குரிய சாதிமொழியாகவே இருந்தது. இந்தியநாட்டு மொழியின் திரிபுகளாகிய பிராகிருதம் எனப்பட்ட மொழிகளே பேசப்பட்டுவந்தன.[3]

2. Rhys Davids gives of an account of the life in the days of Buddha which probably holds true generally for the Dravidian communities—The children of the Sun.—p 337 - W. J Perry M. A.

3. The Vedic language was a "caste language" a "scholastic dialect of a class" employing forms of different linguistic periods, "an artificially archaic dialect, handed down from one generation to the other within the class of priestly singers - Macdonnel.

Sanskrit came into prominance about five thousand years ago in northern India. It appeared from the beginning not as an Indian vernacular, but as the hand maiden of the Arya cult, a literary language, used as the vehicle of the aspirations of the Rishis when they appealed to the gods to satisfy their longings in this world and the next. The Hindus have called it the language of the gods—*deva bhasa*—and this apparently means that there is no evidence of its employment as a vernaculur by common men in

ஆரிய மொழியைச் சேர்ந்தனவென்று கருதப்படும் வட இந்திய மொழிகளின் இலக்கண அமைப்பு திராவிட மொழி இலக்கணத்தை ஒத்துள்ளதென்றும், ஒரு மொழியின் குடும்பத்தொடர்பை அறிவது இலக்கண அமைப்பினாலல்லது சொற்களைக் கொண்டு அறிதல் கூடாதென்றும், வட இந்திய மொழிகள் திராவிட மொழிகளின் திரிபு என்றும் பி. தி. சீனிவாச ஐயங்கார் துணிந்துள்ளார்.[4]

பாரசீகர் வடநாட்டின் சிலபகுதிகளை வென்று சில காலம் ஆட்சி நடத்தினார்கள். பின்பு கிரேகர்படை எடுப்பு நேர்ந்தது. பின்பு சித்தியர் மங்கோலியர் அவுணர் (Huns) முதலிய பல சாதியினர் வடநாட்டின்மீது படை எடுத்துவந்து நாட்டில் சிற்சில பகுதிகளிற் குடியேறி இந்திய மக்களோடு கலந்தார்கள். இதனால் அலக்சாந்தர் படை எடுப்புக் காலம் முதல் மேலும் மக்கட் கலப்பும் மொழிக் கலப்பும் இந்திய நாட்டில் உண்டாயின.

இந்திய மக்களின் குலமுறையான ஆராய்ச்சி நடத்திய ரைஸ்லி என்பார் இன்று இந்தியாவில் காணப்படும் குலப் பிரிவினரை கீழ்வருமாறு பிரித்துள்ளார்; படத்திற் காண்க.

---

their ordinary secular life before it became the language of the mantras by means of which men spoke to the gods—Stone age in India p. 45 - P. T. S Iyengar.

4. The so called Gaudian dialects now spoken in Northern India from Punjab down to Aryavarta agree in grammatical structure with the so called Dravidian dialects of south India The family relationships of languages can best be ascertained not so much by similarities of their vocables but by an examination of the essential struclure of the languages, by their schemes of accidence of gender, number and cases of




**திராவிடருக்கு முற்பட்டதிராவிடர் என்னும் கொள்கை**

திராவிடர் இந்தியநாட்டுக்கு அயலிலிருந்து வந்தார் கள். அவர் வருகைக்குமுன் நிகுரோவக் குணங்குறிகளுள்ள

---

nouns and adjectives, of voices, mood number gender, tenses and other inflections of verbs, of their essential structure—such as the order of words in sentences and the methods of formation of idioms. A compara-

ஒருசாதியினர் அங்கு வாழ்ந்துகொண்டிருந்தார்கள் என்றும், அவர்கள் திராவிடருக்கு முற்பட்ட திராவிடர் (pre-Dravidians) எனப்படுவர் என்றும், அம் மக்களே இன்று மலைகளில் வாழ்வோரென்றும் ஒரு சிலர் எழுதி வருகின்றனர். இக் கொள்கைக்கு ஆதாரம் ஒரு சிறிதும் கிடைக்கவில்லை. திராவிட மக்கள் வாழும் இடங்களுக்கேற்ப ஐந்து வேறுவகைத் திருத்தங்களுடையவர்களாக வளர்ச்சியடைந்தார்கள் என முன் கூறியுள்ளோம். அவர்களில் குறிஞ்சி பாலை நிலமக்களே மற்ற மக்களின் தொடர்பின்றிப் பழைய முறையில் வாழ்ந்து புதிய சில பழக்க வழக்கங்களுடையராய் வருகின்றனர். அவர்களின் உடல் நிறம் வளர்ச்சி முதலியன அவர்களின் உணவு வாழ்க்கை நிலை போன்றவை ஏதுவாக உண்டானவை. திரு. வி. ஆர். இராமசந்திரதீட்சிதர் அவர்கள் கூறுவது வருமாறு. "திராவிடருக்கு முற்பட்ட திராவிடர் (Pre Dravidans) பழைய திராவிடர் (Proto - Dravidans) என்னும் கொள்கைகள் இருபதாம் நூற்றாண்டுக் கற்பனை. பழம் பொருள் ஆராய்ச்சியாளராவது வரலாற்றுக்காரராவது தென்னிந்தியாவில் ஒன்றுக்குப்பின் ஒன்றாகத் தொடர்ந்து வந்த பண்பாட்டுக் காலங்களில் புதிய மக்கள் புகுந்து மாறுதல்களைக் கொண்டுவந்தார்கள் என்று சொல்வதற்கேற்ற ஆதாரம் ஒன்றும் காட்டமுடியாது. பழைய கற்காலப்

---

tive study of modern North Indian and South Indian dialects reveals the fact that their fundamental grammatical structure is so very much the same that it is possible to translate from one of these languages into any other by the simple proess if the substitution of one word for another — a procedure absolutely impossible when translation from Sanskrit or English into any of the spoken dialects of ancient or modern India — **Stone age in India. P. 44.**

பண்பாட்டுக்குப்பின் புதிய கற்காலப் பண்பாடும் அதற்குப் பின் இரும்புக் காலப் பண்பாடும் முறையே ஒன்றை ஒன்று தொடர்ந்து வந்தன என்று கொள்வதற்கு ஏற்ற சான்றுகளே காணப்படுகின்றன. பழம் பொருளாராய்ச்சி இக் கொள்கைக்கு வலி அளிக்கின்றது. காடுகளிலும் மலைகளிலும் வாழும் மக்கள் குலமுறையாகத் தென்னிந்திய மக்களோடு பொருந்தாதவர்கள் என்று கொள்ளுதல் சாலாது. புதிய கற்காலம் முதல் தென்னிந்தியாவில் ஐந்து வகையான பண்பாடுகள் இருந்து வருகின்றன வென்பதைத் தென்னிந்திய மக்களைப்பற்றி ஆராய்ச்சி செய்வோர் நன்கு அறிவர். வேட்டையாடியும் மீன் பிடித்தும் வாழ்வோர் பழைய கற்காலப் பண்பாட்டைச் சேர்ந்தவர். அவர்கள் தொடர்பாகக் காடுகளிலும் கடற்கரைகளிலும் வாழ்ந்தமையால் அவர்களின் மனப்பாங்கும் வாழ்க்கைப் பழக்கங்களும் தனிமுறையில் வளர்ச்சியடைந்தன. நிறத்தைப் பற்றி நாம் ஆராயவேண்டியதில்லை. இது சூழலின் வெப்ப நிலை, கையாளும் தொழில் சம்பந்தங்களால் உண்டாவது. பயிரிடும் தொழில் பரவினதால் பழைய பொருளாதார வழிகள் முற்றாக மாறுதலடைந்தன என்று கொள்ளுதல் முடியாது. சில சூழல்களில் விடப்பட்டோர் பழைய தொழில்களையும் பழக்க வழக்கங்களையும் பற்றித் தம் வாழ்க்கையை நடத்தினர். வேளாளர், காராளர், ஆயர் வேறு வகையான பண்பாடுகளை எய்தினர். பாலை நில மக்கள் குறிஞ்சி மக்களோடு கலந்து ஒன்றுபட்டனர். தமிழ் நாட்டில் பாலை என்று தனி நிலம் இல்லை. ஆகவே கடற்கரைகளிலும் மலைகளிலும் வாழும் மக்களைத் திராவிடருக்கு முற்பட்ட திராவிடர் என்று கூறுதல் சாலாது"*

---

* Origin and Spread of the Tamils p. 28

பி. தி. சீனிவாச ஐயங்கார் ஆரியருக்கு முற்பட்ட தமிழர் பண்பாடு என்னும் நூலிற் கூறியிருப்பது வருமாறு.

§"தமிழ் மொழிக்குரிய மக்களைப்போலவே அம்மொழியும் தென்னிந்தியாவிலேயே தோன்றி யாதும் குழப்பமின்றி உயர்ந்த இலக்கிய வளர்ச்சி நிலையை அடைந்தது. கற்காலம் முதல் தமிழ்க்குலம் ஒரே தொடக்கத்தைச் சேர்ந்ததாக இருந்து வருகின்றது. தமிழ் மொழியைப் பயின்ற அயல் நாட்டு ஆராய்ச்சியாளர் சிலர் தமிழ் மொழியை வழங்கிய பழைய மக்கள் மத்திய ஆசியாவினின்று, வந்தார்கள் என்றும் அதற்குக் காரணம் பலுச்சிஸ்தானத்தில் வழங்கும் பிராகூய் மொழியில் தமிழுக்கு இனமுடைய பல சொற்கள் காணப்படுகின்றன வென்றும் தம்மனம்போல் கூறினர். பிராகூய் மொழியில் தமிழுக்கு இனமுடைய சொற்கள் காணப்படுதல் தமிழ் இந்தியமொழியன்று எனக் கூறுவதற்குப் போதுமான ஆதாரமாகாது. இரண்டு தலைமுறைக்கு முற்பட்ட ஆராய்ச்சி ஆளர் உலகில் வாழ்ந்த பழைய மக்கட் குலத்தினை எல்லாம் வேறு எங்கோ இருந்து வந்தவர்கள் எனக் கூறுவது இயல்பாக இருந்தது. அவர்களுக்கு தென்னிந்தியாவில் கற்காலப் பண்பாடு எவ்வளவில் பரவி யிருந்ததென்றும், தமிழின் பழைய அடிப்படையில் தமிழர் தென்னிந்தியாவில் அறியமுடியாத காலம்முதல் வாழ்ந்து வருகின்றார்கள் என்பதற்கு போதிய சான்றுகளுள்ளன வென்பதையும் அவர்கள் அறியாதிருந்தார்கள். புதிய கற்காலப் பண்பாட்டுக்கு மத்திய இடம் தென்னிந்தியாவே. கடப்பா பழைய மத்தியகாலப் பழங் கற்காலப் பண்பாட்டுக்கு மத்திய இடமாகும். எகிப்திலே நீல ஆற்றங் கரையிலிருந்து மறைந்துபோன பழைய

---

§ Pre Aryan Tamil culture p. 12

நாகரிகத்தின் சின்னங்கள் சில இன்றும் தக்காணத்தில் உள்ளன. எலியட்சிமித் என்பார் கிழக்கு ஆபிரிக்க மக்களிடையே காணப்பட்டனவும், இன்றும் தக்காணத்திற் காணப்படுகின்றனவுமாகிய திராவிட மக்களின் நம்பிக்கைகள் பழக்க வழக்கங்களையும் எடுத்துக்காட்டி இரு மக்களுக்கும் தொடக்கம் ஒன்று எனக் குறிப்பிட்டுள்ளார்.

## ஆறாயிரம் ஆண்டுகளின் முன் திராவிடர் நாகரிகம்

திராவிட மக்களின் மிகப் பழைய நாகரிகத்தைப்பற்றி மொகஞ்சதரோ, அரப்பா, சங்குதரோ முதலிய அழிபாட்டு மேடுகளிற் கண்டுபிடிக்கப்பட்ட பழம்பொருள்கள் வெளியிடுகின்றன. அரப்பா மொகஞ்சதரோ முதலிய நகரங்களில் திராவிடமக்கள் வாழ்ந்தார்கள். அக்காலத்தில் அவர்கள் எகிப்தியர் பாபிலோனியர்களை ஒத்த அல்லது அவர்களிலும் உயர்ந்த நாகரிகமுடையவர்களாக வாழ்ந்தார்கள். அக் காலத்தில் இரும்பு பயன்படுத்தப்படவில்லை. நகரங்கள் அமைக்கப்பட்டிருந்தன. வீடுகள் செங்கற்களால் கட்டப்பட்டன. அவைகளுக்கு மாடிகளும் மாடிகளுக்குச் செல்லப் படிக்கட்டுகளுமிருந்தன. மாடிகளிலிருந்து கழிவு நீர் கீழே செல்வதற்குச் சூளையிட்ட மண்குழாய்கள் பொருத்தி வைக்கப்பட்டிருந்தன. கூரைவழியாக வழியும் நீர் பீலிகளில் விழுந்து பின் குழாய்கள் வழியே கீழே சென்றது. ஒவ்வொரு வீட்டுக்கும் கிணறும் குளிக்குமறையும் இருந்தன. கழிவுநீர் கால்வாய்கள் வழியாக வீதியிலுள்ள பெரிய கால்வாயில் விழுந்தது. கால்வாய்கள் செங்கற் பதிக்கப்பட்டிருந்தன. தண்ணீர் சென்று விழும் இடத்தில் செங்கற்பதித்த குழி இருந்தது. பாரமான பொருள்கள் குழியில் தங்கின்றன. சுத்தஞ்

செய்வோர் அக் குழிகளில் தங்கிநிற்கும் அழுக்குகளைச் சுத்தஞ் செய்தனர். வீடுகளுக்கு மலகூடங்களும் இருந்தன.

பெரிய வீதிகள் 33-அடி அகலமுடையன. சிறிய வீதிகள் 18-அடி அகலமுடையன. மக்கள் வாற்கோதுமையையும், கோதுமையையும் விளைவித்தார்கள். ஆடு, மாடு, எருமை முதலிய விலங்குகள் வீடுகளில் வளர்க்கப்பட்டன. யானைகள் பழக்கி வேலை செய்விக்கப்பட்டன. மக்கள் பஞ்சு விளைவிக்கவும் பஞ்சிலிருந்து நூல் நூற்கவும் நூலிலிருந்து ஆடை நெய்யவும் அறிந்திருந்தார்கள். அவர்கள் எகிப்து பாபிலோன் பாரசீகம் முதலிய நாடுகளோடும் தென்னிந்தியாவோடும் வாணிகம் புரிந்தார்கள். ஒருவகைச்சுண்ணும்புக்கல்லிற் செதுக்கப்பட்ட முத்திரைகளும், நாட்டியமாடும் பாவனையுள்ள பாவைகள், சுவாத்திக அடையாளமிட்ட பொருள்களும், எருமை காண்டாமிருகம் யானை மாடு போன்ற வடிவங்களும் எழுத்துக்களும் வெட்டப்பட்ட முத்திரைகளும், கல், பொன், செம்பு, வெண்கலம், வெள்ளி முதலியவைகளால் செய்யப்பட்ட பாத்திரங்களும் இவைபோன்ற அழகிய பொருள்களும் காணப்பட்டன. அக் கால மக்கள் இவ் விருபதாம் நூற்றாண்டு மக்களைவிடப் பலவகையில் உயர்ந்த நாகரிக நன்னிலை அடைந்திருந்தார்கள் என ஆராய்ச்சியாளர் நவின்றுள்ளார்கள்.[1] சிந்துவெளி நகரங்களின் காலம் கி. மு. 3500 வரையில்.

---

1. The excavations at Mohenjo Daro have revealed the state of things of a date long anterior to that of the Birth of Buddha. In the words of Dr. Hirananda Sastri, the late Epigraphist of the Government of India, "There is no known structure in the pre-historic Egypt or Mesopatamia or elsewhere to compare with

பிற்காலத்தில் இந்திய நாட்டை வந்தடைந்த ஆரிய மக்களும் அவர்களின் சந்ததியினரும் அப்பழைய நாகரிக முறைகள் பலவற்றைக் கைக்கொண்டனரென்றும் அதற்குச் சான்று அவர்களின் வேதபாடல்களில் காணப்படுகின்றதென்றும் ஆராய்ச்சி அறிஞர் கூறுவர். திராவிட மக்களைப்பற்றிய சில குறிப்புகள் வேதங்களிற் காணப்படுகின்றன. பாரதம் இராமாயணம் என்னும் நூல்களில் தென்னாட்டு அரசர்களைப்பற்றியும் தென்னாட்டைப்பற்றியும் சில குறிப்புகள் காணப்படுகின்றன. அந்நூல்கள் காலத்துக்குக் காலம் எழுதிச் சேர்க்கப்பட்டன வாதலின் அவைகளிற் கூறப்படுவன சிறந்த வரலாற்றுச் சான்றுகளாகமாட்டா.

"மாபாரதத்தையும் இராமாயணத்தையும் நாம் கி. மு. 5-ம் நூற்றாண்டைய நூல்கள் எனக்கொள்ளலாம். அந்நூல்களின் எப் பகுதி எக் காலத்தில் செய்யப்பட்டது என்னும் ஐயப்பாடும் உண்டாகின்றது. அவைகளில் கூறப்படும் இந்திய நாட்டின் பிரிவுகள் கி. மு. நாலாம் நூற்றாண்டுவரையில் உறுதியாக அமைந்திருந்தனவென்று கொள்ளலாம். சாதகக் கதைகள் பதினாறு இராச்சியங்களையும் வேறு சில நாடுகளையும் பற்றிக் கூறுகின்றன. அவைகளை எல்லாம் இந்திய படமொன்றில் ஒழுங்கு படவைத்துப் பார்த்தால் மிகத் தெற்கே உள்ள நாடு கோதாவரிக்குத் தெற்கே போகவில்லை. பழைய பௌத்த இலக்கி

---

the well built commodious houses of the citizens of Mohenjo Doro. Their sanitary baths and the elaborate system of drainage show that even the ordinary town folk there enjoyed a degree of comfort and luxury unknown in other parts of the then civilized world" that was some what about B. C. 5000- Bulletin No 3 of Sri Rama Varma Research Institute.

யங்கள் விந்தியத்துக்குக் கீழே உள்ள நாடுகளைப் பற்றி அறியா.

பாணினிக்குத் தென்னாட்டைப் பற்றித் தெரியாது. அவர் தெற்கே உள்ளனவாகக் குறிப்பிட்ட இடங்கள் கச்சா, அவந்தி, கோசலம், கருசா, கலிங்கம் என்பன. இவை விந்தத்துக்கு வடக்கே உள்ளன. பாணினிக்கு இரண்டு நூற்றாண்டுகளின் பின் விளங்கிய கார்த்தியாயனர் தென்னாட்டைப்பற்றி அறிந்திருந்தார். பதஞ்சலி காலத்தில் தென்னாடு நன்றாக அறியப்பட்டிருந்தது. பதஞ்சலியின் காலம் கி. மு. 150. கார்த்தியானரின் காலம், கி. மு. 350. பண்டாக்கரது கொள்கையின்படி பாணினி கி. மு 7-ம் நூற்றாண்டில் விளங்கினார்.[1] அக் காலத்தில் வடநாட்டவரால் தென்னாடு சிறிதும் அறியப்படாதிருந்தது. மெகஸ்தீனஸ் காலத்தில் தென்னிந்தியாவைப்பற்றி வடநாட்டவர் சிறிது அறிந்திருந்தார்கள். சாணக்கியரின் அர்த்த சாத்திரத்தில் தென்னாட்டைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. அசோகரின் கல்வெட்டுக்களில் சேரசோழ பாண்டியர் நாடுகள் குறிக்கப்பட்டுள்ளன.[2]

## தமிழ்நாட்டெல்லை

கி. மு. 1000 வரையில் விந்தியமலைக்கு வடக்கே உள்ள நாடுகள் ஆரியாவர்த்தம் என்னும் பெயர் பெற்றிருந்தன. விந்தியத்துக்குத் தெற்கே தமிழ் வழங்கிற்று. கி. மு. 1000 வரையில் எபிரேய மொழியில் சென்று வழங்கிய பெயர்கள் தமிழாகவே காணப்படுகின்றன. தொல்காப்பியம் செய்யப்படுகின்ற காலத்தில் தமிழ் நாட்டின் வட

1. கி. மு. 4-ம் நூற்றாண்டென்பது பெரும்பாலார் துணிபு.

2. Beginnings of South Indian History pp. 64—9 S. K. Aiyangar.

வெல்லை திருப்பதி மலையாகவிருந்தது. அக்காலத்தில் தெலுங்கு தனிமொழியாகப் பிரிந்துவிட்டது. ஒருகாலத்தில் **தமிழ்நாட்டெல்லை கிருட்டிண ஆறுவரையில் இருந்ததெனச்** சிற்பநூலிற் காணப்படுவதாக ஆசிரியர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் சங்ககாலத்தமிழும் பிற்காலத்தமிழும் என்னும் நூலிற் குறிப்பிட்டுள்ளார். ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட இலக்கியங்கள் தெலுங்கு மொழிக்கு இல்லை. * சங்கச் செய்யுட்களில் வேங்கடத்துக்கு வடக்கே வடுகர் நாடு இருந்ததெனக் காணப்படுகின்றது.

பழம் பொருள் ஆராய்ச்சி வரலாற்று ஆராய்ச்சிக்கு எவ்வகையில் துணைபுரிகின்றதோ அவ்வாறே பழைய இலக்கியங்களும் அதற்குத் துணைபுரிகின்றன. சங்கநூல்களைக் கொண்டு இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளின் முன் தமிழகத்தின் பண்பாடு எவ்வகையினதெனநாம் தெள்ளிதில் அறியக்கூடும்.

## சங்ககாலத்தில் தமிழ்நாடு

[1] கிருட்டிண ஆற்றுக்குத் தெற்கே கன்னியாகுமரி வரையிலுமுள்ள நிலப்பரப்பு மூன்று பெருவேந்தராலும் ஏழு குறுநில மன்னராலும் ஆளப்பட்டது. இவர்களை அன்றிப் பல சிற்றரசர்களும் இருந்தார்கள். கடற்கரையை அடுத்தவும் வெளியாகவுள்ளவும் பகுதிகளே பெரிய அரசரால் ஆளப்பட்டன. மலைகளும் காடுகளும் குறுநில மன்னருக்கு உரியனவாயிருந்தன. கிழக்குக் கடற்கரை ஓரமாகக் கிருட்டிண ஆறுதொடக்கம் இராமநாதபுரப்பகுதியிலுள்ள

*. Telugu does not take its available literature much anterior to ninth century A. D -The beginnings of South Indian Historay. P. 35. S. K. Aiyengar.

1. Ibid.

தொண்டி வரையிலுள்ள நாடு சோழர் ஆட்சிக்குட்பட்டிருந்தது. இதன் மத்தியில் காஞ்சி ஆளுகைக்குட்பட்ட திருக்கோயிலூரைச் சூழ்ந்த மலைநாடு மலையமானுக்கு உரியதாயிருந்தது. சோழ இராச்சியத்துக்குத் தெற்கே பாண்டிய நாடு இருந்தது. இது கடற்கரையிலிருந்து கடற்கரை வரையும் பரந்து இக்கால மதுரை திருநெல்வேலி திருவிதாங்கூர் முதலிய மாகாணங்களும் கோயமுத்தூர் கொச்சி முதலியவற்றின் பகுதிகளும் அடங்கியதாயிருந்தது. மேற்குத் தொடர்ச்சி மலையில் ஆயின் மலை நாடு இருந்தது. தாலமி ஆய்யை அய்ஓய் (Aioi) எனக் குறிப்பிட்டுள்ளான். திருநெல்வேலியிலுள்ள கொற்கைத் துறைமுகத்தை அடுத்து எவ்விநாடு இருந்தது. பழனி மலையைச் சுற்றிப் பேகன் நாடு இருந்தது. இதற்கு வடக்கே கடற்கரையை அடுத்துச் சேரநாடு இருந்தது. இதுபாலக் காட்டுவெளிக்கு ஊடாக சேலம் கோயமுத்தூர் வரையும் நீண்டிருந்தது. தென் மைசூரில் தொடங்கி ஒன்றின் பக்கத்தே ஒன்றாக இருங்கோவேளின் அரயம் நாடும், பாரியின் பறம்பு நாடும், அதியமானின் தகடூரும் (தருமபுரி) ஓரியின் கொல்லிமலையும் இருந்தன. முதல் மூன்று நாடுகளும் மைசூர் எல்லைக்குள் இருந்தன. இவ் வெல்லைக்கு அப்பால்கிழக்கே கங்கர்நாடும் தெற்கேகொங்கு நாடும் இருந்தன. தமிழ் நாட்டின் மேற்கேயுள்ள வட எல்லைப்புறம் துளுவ நாட்டரசனாகிய நன்னனுக்கும், கிழக்கேயுள்ள வட எல்லைப்புறம் வேங்கடத்துப் புல்லிக்கும், உரியனவாயிருந்தன. அதற்கு வடக்கே ஆரிய நாடும் (வடுகர்நாடு) தண்டாரணியமும் இருந்தன.

## குறுநில மன்னர் நாடுகள்




### தென்னாட்டில் படை எடுப்புகள்

மௌரிய சந்திரகுப்தன் காலம்வரையில் தென்னாட்டில் அயல்நாட்டுப் படை எடுப்புகள் நேரவில்லை. சந்திரகுப்தனுடைய மரணத்துக்குப்பின் அவன் மகன் பிந்துசாரன் தமிழ்நாட்டின்மீது படை எடுத்தான். இதன்மேல் இடையிடையே வடநாட்டவர் படை எடுப்புகள் நேர்ந்தன

சேர, சோழ, பாண்டிய அரசர் ஆரியரைவென்று வில்லும் புலியும் மீனுமாகிய தத்தம் கொடிகளை மேருவில் நாட்டியும் அக் குறிகளை அம்மலையில் தீட்டியும் உள்ளார்கள் எனத் தமிழ்ப் பழம் பாடல்களில் காணப்படுவன ஆரியர் தமிழர் போர்களையே குறிக்கின்றன. சேர அரசருள் செங்குட்டுவனும், பாண்டிய அரசருள் நெடுஞ்செழியனும், சேர அரசருள் கரிகாலனும் ஆரியரைவென்றதாக வரலாறு உண்டு.

## களப்பிரர்

கி. பி. நாலாம் நூற்றாண்டில் களப்பிரர் என்னும் ஒரு கூட்டத்தினர் கிளம்பித் தொண்டை நாடு ஒழிந்த மற்றை மூவேந்தர் நாடுகளையும் அடிப்படுத்தி ஏறக்குறைய இரு நூறு ஆண்டுகள் ஆட்சி புரிந்தனர். களப்பிரர் எங்கிருந்து வந்தார்கள் என்பதும் பிறவும் அறியமுடியாமல் இருக்கின்றன. கடுங்கோன் களப்பிரரை வென்று பாண்டிய இராச்சியத்தை அவரிடமிருந்து மீட்டான்.

## பல்லவர்

கி. பி. மூன்றாம் நூற்றாண்டுமுதல் பல்லவர் காஞ்சியைத் தலைநகராகக்கொண்டு தொண்டைநாட்டை ஆண்டு வந்தனர். தொண்டைமான் இளந்திரையன் மணிபல்லவத்து நாககுலப்பெண்ணுக்கும் சோழனுக்கும் பிறந்தவனென்று சங்கநூல்களிற் காணப்படுகின்றது. மணிபல்லவ அரச குடும்பப் பெண்வழித் தோன்றிய இளந்திரையனின் சந்ததியினர் பல்லவர் எனப்பட்டார்களாகலாம். பல்லவம் கொடியைக் குறிக்கும். பல்லவர்ஆட்சி ஒன்பதாம் நூற்றாண்டில் மறைந்துபோயிற்று. பல்லவம் என்பதன் மறுபெயரே தொண்டை என்பது எஸ். கே. ஐயங்கார் கருத்து.

ஆந்திர நாட்டின் மேற்குக்கரையில் விந்தயமலைக்குத் தெற்கிலும் சேரநாட்டு எல்லைக்கு வடக்கிலும் சாளுக்கியர் என்னும் ஒரு கூட்டத்தினர் அதிகாரமுடையவராய் கி. பி. 7-ம் நூற்றாண்டு தொடக்கம் ஆட்சிபுரிந்தனர். சாளுக்கியருக்கும் பல்லவருக்கும் போர்கள் நடந்தன. புலிகேசி என்னும் சாளுக்கிய வேந்தன் மகேந்திரவன்மன் என்னும் பல்லவ அரசனோடு பொருது கிழக்கே கிருட்டிணைவுக்கும் கோதாவரிக்கும் இடையிலுள்ள வெங்கி நாட்டைக் கைப்பற்றி அதனைத் தனது தம்பியை ஆளும்படி நியமித்தான். அது காலத்தில் கிழக்கு சாளுக்கிய நாடு எனப்படுவதாயிற்று.

## ஊர் அமைப்பு

கோயிலைச்சுற்றி அல்லது அரசனுடைய அரண்மனையைச்சுற்றியே நகரங்கள் எழுந்தன. ஒவ்வொரு கிராமத்துக்கும் கோயில் மத்திய இடமாக விருந்தது.* மக்கள் கோயில்களைச்சுற்றிக் குடியேறினார்கள். ஒவ்வொரு தொழில் செய்வோரும் தனித்தனி வீதிகளில் வாழ்ந்தார்கள். கிராமத்தின் நடுவில் வெளியிருந்தது. அது மன்றம் எனபபடடது. அங்கு நிழல்மரம் நின்றது. அதைச் சுற்றித் திண்ணையிடப்பட்டிருந்தது. ஓய்வு நேரங்களில் மக்கள் அங்கே கூடிப் பொழுதுபோக்கினாகள். அங்கு [illegible]வைகளுங் கூட்டப்பட்டன. நியாயத்தீர்ப்பும் அங்கு செய்யப்பட்டது. பள்ளிக்கூடங்களும் அங்கு நடத்தப்பட்டன. எல்லாவகையான நிகழ்ச்சிகளுக்கும் கிளர்ச்சிகளுக்கும் மன்றம் மத்திய இடமாயிருந்தது.

---

* கோயிலில்லாத ஊரிற் குடியிருக்கவேண்டாம் (ஔவையார்)

அங்கு அருள்தறி நிறுத்தி வழிபடப்பட்டது. கிராமத்தில் நடக்கவேண்டிய ஒவ்வொரு முக்கிய நிகழ்ச்சியைப்பற்றியும் அங்கு கூட்டங்கள் கூட்டி ஆலோசிக்கப்பட்டன. கிராமங்கள் கிராமசபைகளால் ஆளப்பட்டன. பெரும்பாலும் அவ்வக்கிராமங்களிலுள்ள கடவுளின் பெயரால் கிராமங்களின் பெயர்கள் அறியப்பட்டன. ஒவ்வொரு கோயிலும் ஒரு அரண்மனையின் அமைப்பைப்போலக் கட்டப்பட்டது. அரசனுடைய மாளிகையும் கோயில் எனப்பட்டது.

அரசனுடைய மாளிகை அல்லது அரண்மனையைச் சுற்றி மதில் இடப்பட்டிருக்கும். அதற்கு அடுத்து அரச குடும்பத்தினரும் அரசனது கருமத்தலைவர்கள் வாழும் வீதிகளும் இருக்கும். இவ்வீதிகளைச்சுற்றி மதிலிடப்பட்டிருக்கும். மதிலுக்கு வெளியேயுள்ள வீதிகளில் பற்பல தொழில் புரியும் மக்கள் வாழ்வார்கள். அங்கு கடைகளும் கடைத்தெருக்களும் உண்டு. பகைவர் இலகுவில் அழிக்கவும் ஏறவும் முடியாத மதில் நகரைச் சூழ்ந்து இருந்தது. மதிலின் வாயில்களுக்கு பெரிய மரங்களால் இரும்பு சேர்த்துச் செய்யப்பட்ட கதவுகள் இடப்பட்டிருந்தன. அவை பழைய கோயில்களி லிடப்பட்டுள்ள கதவுகள் போன்றவை. உள்ளே திரண்ட மரங்களால் அவை தாழிடப்பட்டிருந்தன. கோட்டை வாயிலில் கொடிகள் கட்டப்பட்டிருந்தன. மதிற்சுவர்கள் வீரர்நின்று போர்செய்தற் கேற்ற அகலமுடையனவாயிருந்தன. கொதி எண்ணெயை இறைப்பனவும், நெருப்பை வீசுவனவும், கல் எறிவனவும், அம்பு உமிழ்வனவும் போன்ற பொறிகள் பல மதிற்சுவர்களில் அமைக்கப்பட்டிருந்தன. வெளிமதிலைச் சுற்றிப்

பெரிய அகழ் இருந்தது. இது ஆழமுடையதாகவும் நீர் நிறைவுடையதாகவும் இருந்தது. நீரில் பெரிய முதலைகளும் மீன்களும் இருந்தன. கோட்டைவாயிலிலிருந்து அகழி யைக் கடக்கக் கூடியதாகப் பலகை இடப்பட்டிருந்தது. போர்க்காலங்களில் பலகை எடுக்கப்பட்டது. அகழில் வெளியே முள்மரங்கள் நடப்பட்டுள்ள காவற்காடு இருந் தது. அங்கு வேட்டுவர் வாழ்ந்தனர். அதற்கு வெளியே விளை நிலங்கள் இருந்தன.

கி. பி. 1225-ல் இந்தியாவுக்கு வந்துதிரும்பிய* சீனப் பிரயாணி ஒருவன் எழுதியிருப்பது கொண்டு அக்காலக் கோட்டை எவ்வாறிருந்ததென்று நாம் அறிந்துகொள்ள லாம்.

"இங்கு (சோழநாட்டில்) ஏழுசுற்றுமதில்களுள்ள நகரம் உண்டு. வடக்கிலிருந்து தெற்குநோக்கியுள்ள வெளி மதிலின் நீளம் பன்னிரண்டு லி ($LI$) கிழக்கிலிருந்து மேற்கே செல்லும் மதிலின் நீளம் ஏழு'லி' ஒவ்வொரு சுற்று மதிலுக்குமிடையில் நூறடி வெளியுண்டு. ஏழு மதில் களில் நான்கு செங்கல்லாற் கட்டப்பட்டவை; இரண்டு களிமண்ணால் எடுக்கப்பட்டவை; மத்தியிலுள்ளது மரத்தி னாற் கட்டப்பட்டது. அங்கு பழமரங்களும் பூ மரங்களும் நடப்பட்ட சோலை உண்டு. முதல் இரண்டு சுவர்களுக்கு இடையிலுள்ள வெளியில் மக்களின் வீடுகள் உண்டு. அவை அகழியாற் சூழப்பட்டுள்ளன. மூன்றும் நான்காம் சுவர் களுக் கிடையிலுள்ள வெளியில் அரசாங்க கருமகாரர் களின் வீடுகளுண்டு. ஐந்தாவது மதிலுக்குள் அரசனு டைய குமாரர் வாழ்கின்றனர். ஆறாவது சுவருக்குள்

* Chau Ju - Kua.

கோயில்களும் பூசாரிகளின் வீடுகளும் உண்டு. ஏழாவது சுவருக்குள் நானூறுவீடுகள் அடங்கிய அரண்மனை உண்டு."

மௌரிய சந்திரகுப்தனுடைய அரண்மனையைப்பற்றிச் சொல்லப்படும் விபரமும் பிறவும் சங்க இலக்கியங்களிலும் உதயணன் கதையிலும் கூறப்படுவனவற்றை ஒத்திருக்கின்றன. அவற்றை இங்கு தருகின்றோம்.

"அரசனுடைய அரண்மனை பெரிய பூஞ்சோலையின் நடுவில் உள்ளது. அங்கு பழகிய மயிற் சேவல்களும் அழகிய கோழி இனங்களும் உலாவித் திரிந்தன. நிழல் மரங்களின் கொம்புகள் ஒன்றோடு ஒன்று பின்னிக் கிடந்தன. அங்கு நாட்டப்பட்டுள்ள மரங்கள் எப்பொழுதும் பச்சையாக இருக்கும். அவை ஒருபோதும் இலை உதிர்த்துவதில்லை. அங்கு பறவைகள் பல வாழ்கின்றன. அவை கிளைகளில் கூடுகட்டியுள்ளன. அங்கு பல குளங்கள் உண்டு. அவைகளில் மிகப் பெரிய பழகிய மீன்கள் விடப்பட்டுள்ளன. அரசனுடைய குமாரரல்லாத பிறர் அக் குளங்களில் மீன்பிடிக்க அனுமதிக்கப்பட மாட்டார்கள்.

அரசனுடைய அரண்மனையை அலங்கரிக்கும் முலாம் பூசப்பட்ட தூண்களில் பொன்கொடிகள் சுற்றியிருக்கின்றன. அவைகள்மீது வெள்ளியால் செய்யப்பட்ட பறவைகள் இருக்கின்றன. அரண்மனையைச்சுற்றி மதிலும் அகழும் உள்ளன. அரண்மனையின் பின்புறத்தில் பெண்கள் உறையும் அறைகள் உண்டு. அங்கு கூனும் குறளும் இருப்பர். பெண்கள் உறையும் அறைகளுக்கு வெளியே இராசகுமாரரும் இராசகுமாரிகளும் உறையும் அறைகள் இருந்தன. அவைகளுக்கு வெளியே கொலுமண்டபமும்

கருமகாரின் அறைகளும் இருந்தன. அரசனுக்கு தனி அறைகள் இருந்தன

அரண்மனையில் பல இரகசிய அறைகளும், சுரங்க வழிகளும், உள்ளே வெளியுள்ள தூண்களும், மறைவான படிக்கட்டுகளும், கீழே விழுந்து விடக்கூடிய தரையும் இருந்தன.—Chandra Gupta Maurya and his time—p 194.—R K. Mookerji.

அரசனுடைய அதிகாரம் எல்லா அதிகாரங்களுக்கும் மேலாகவிருந்தது. தந்தைக்குப்பின் மகன் என்றவாறு அரசுரிமை தலைமுறை தலைமுறையாக வந்தது. அரசனுடைய கடமை துட்டரைத் தண்டிப்பதும் மக்களின் அமைதியைக் காப்பதுமாகும். அரனுடைய விருப்பமே நாட்டின் சட்டம்; அதனை மறுத்தல் எவருக்கும் முறையாகாது. போரில் அரசனே படையை நடத்திச் சென்றான். சமாதான காலத்தில் எல்லாத் தீர்ப்புகளுக்கும் அவனே தலைவனாக விருந்தான்.

அரன் இருக்கும் மண்டபம் மிகவும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அவனைச் சூழ்ந்து பல ஆடம்பரங்கள் இருந்தன. மக்கள் அதனையே விரும்பினார்கள்.* அரசன்

---

* சோ யுகுவா (Chau Ju Kua 1225 A·D) என்னும் சீனப் பிரயாணி இலங்கை அரசனைப்பற்றிக் கூறியிருப்பது பின்வருமாறு: "அரசன் பல நிற ஆடைகளை உடுத்திருக்கிறான்; சிவப்புத் தோலாற்செய்து பொன்வாரிட்ட செருப்பைத் தரித்திருக்கிறான்; வெளியே செல்லும்போது பல்லக்கில் அல்லது யானைமீது செல்கின்றான்; முத்தைச் சுட்டசுண்ணம்போடு வெற்றிலைபாக்கு மெல்லுகிறான்; வைடூரியம், நீலம் சிவப்பு முதலிய மணிகள் பதித்துச்செய்த நகைகளைப் பூண்டிருக்கிறான். கிழக்கிலும்

இருக்குமிடம் கொலு, அரசிருக்கை அல்லது ஓலக்கம் எனப்பட்டது. அரசிருக்கைவேளை அல்லாத மற்றக் காலங்களில் அரசன் மக்களோடு அளவளாவினன். நகரத்தில் நடக்கும் விழாக்களிலும் அவன் கலந்துகொள்வான். அவனுடைய வெற்றிக்காகவும் நீண்ட வாழ்விற்காகவும்

மேற்கிலும் கொலுமண்டபங்கள் உண்டு, இரண்டு மண்டபங்களிலும பொன் மரங்கள் நாட்டப்பட்டுள்ளன, அவைகளின் கொம்புகளும் அடிமரமும் பொன்மயமானவை; பூக்களும் இலைகளும் காய்களும் வைடூரியம் நீலம் சிவப்பு என்னும் மணிகளால் அமைக்கப்பட்டவை. அரசன் உலாவும் தரையும் அலங்கரிக்கப்பட்டுள்ளது. அம்மரங்களின் அடியில் பொன் சிங்காசனங்கள் உண்டு. அவன் காலையில் கிழக்கு மண்டபத்திலும் மாலையில் மேற்கு மண்டபத்திலும் கொலுவிருக்கிறான். அரசன் இருக்கும்போது சோடிப்புகள் வெளியே மின்னும். பொன்மரங்களும் கண்ணாடி மறைப்புக்களும் ஒன்றின் நிழல் ஒன்றில் பட்டுச் சூரிய உதயம்போல் விளங்கும்.

டை பிரயாணி மலையாள அரசனைப்பற்றிக் கூறியிருப்பது வருமாறு:

அரசன் உடம்பைப் போர்த்திருக்கிறான்; அவன் காலில் செருப்புத் தரித்திருக்கவில்லை. அவன் தலையில் தலைப்பாகை தரித்திருக்கிறான்; அரையில் ஆடை உடுத்திருக்கிறான். அவை இரண்டும் வெண்ணிறமுடையன. சில சமயங்களில் அவன் வெள்ளைச்சட்டை அணிகிறான். அவைகளுக்கு நீண்டு ஒடுங்கிய கைகளுண்டு. வெளியே செல்லும்போது அவன் யானைமீது செல்கின்றான். அப்பொழுது அவன் பொன்முடி அணிகிறான். அது முத்திலும் இரத்தினங்களாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளது. அவனுடைய கையில் பொன்நாடாக் கட்டப்பட்டிருக்கிறது; காலில் பொன்சங்கிலி கிடக்கிறது. அவனுடைய சின்னங்களில் சிவப்புத்தடியில் மயில்இறகு கட்டியகொடி ஒன்று. அதை இருபது பேர் நின்று காவல்புரிகின்றனர். அவனைத் திடகாத்திரமுள்ள ஐந்நூறு அன்னியநாட்டுப் பெண்கள் காவல் புரிகின்றனர். முன்னே செல்பவர்கள், நாட்டியமாடிக்கொண்டு வழியைக்காட்டிச் செல்கின்றனர். நாட்டியப் பெண்களுக்கு முன்னால் அரசனின் கருமத்தலைவர் கொண்டு செல்லப்படுகிறார்கள். அவர்கள் துணியினால் செய்யப்பட்ட ஏணைபோன்ற தூக்கில் இருத்தப்பட்டு பொன்னாலும் வெள்ளியினாலும் அலங்கரிக்கப்பட்ட கம்புகள் மூலம் சுமக்கப்படுகிறார்கள்."

கோயில்களில் துதிகள் சொல்லப்பட்டன. அரசன் தங்கும் மாளிகைகள் அவன் நாட்டின் பல இடங்களில் இருந்தன. நாடு போரின்றி அமைதியுற்றிருக்கும் காலங்களில் அரசன் பெருமக்களோடு நாடு முழுவதையும் சுற்றி வந்தான். ஆட்சி அவன் அதிகாரத்தில் இருந்தபோதும் ஒழுங்கும் நீதியும் நிலவின. அரசனைச் சூழ்ந்து பிரபுக்கள் பெருமக்கள் கரும வினைஞர் முதலியோர் இருந்தனர். முக்கியமான கருமங்களைச் செய்வதன் முன் அவன் உடன் கூட்டத்து அதிகாரிகள் என்னும் கூட்டத்தாரோடு ஆலோசனை செய்தான். அனுபவமும் கல்வியும் உள்ளவர்

---

அரசனுடைய மெய்காப்பாளர் பெண்களாக விருந்தனர் என மெகஸ்தீனஸ் கூறியுள்ளார். ஸ்ராபோ (Strabo) என்பார், "அரசனுடைய மெய்காப்பாளர் பெண்கள். அவன் வேட்டைக்குச் செல்லும்போது பெண்கள் அவனைச் சூழ்ந்து செல்கின்றனர். சில பெண்கள் தேரிலும், சிலர் குதிரை மேலும் சிலர் யானைமேலும் ஆயுதம் தாங்கியவர்களாகச் செல்கின்றனர்" என்று கூறியுள்ளார். கௌடலியர் கூறியிருப்பது கொண்டு கிரேக்க வரலாற்றுக்காரர் கூறியவை உண்மை எனத் தெரிகிறது. கௌடலியர் கூறியிருப்பது வருமாறு: அரசன் படுக்கையைவிட்டு எழுந்ததும் வில்லுத் தாங்கிய பெண்கள் அவனை எதிர்கொள்ள வேண்டும். பெண் அடிமைகளே அவனைக் முழுக்காட்ட வேண்டும், படுக்கையை விரிக்கவேண்டும், அவனது உடைகளை வெளுக்கவேண்டும், அவனை பூமாலைகளால் அலங்கரிக்கவேண்டும். கௌடலியர் கூறுகின்றபடி அரண்மனையில் மூன்று தரங்களான பெண் வேலையாட்கள் இருந்தார்கள். இவர்களில் கணிகையர் எனப்பட்ட கீழ்தரத்தினர் அரசனுக்குக் குடை பிடிப்பர், அவனுக்குப் பக்கத்தே எச்சில் உமிழும் பொன் குண்டிகையைப் பிடித்து நிற்பர். இவர்களுக்கு அடுத்த உயர்தரத்தினர் அரசன் மாளிகையில் இருக்கும்போது பக்கத்தே ஆலவட்டங்களோடு நின்று அவனைச் சேவிப்பர். இவர்களுக்கு உயர்ந்த தரத்தினர் அரசன் சிம்மாசனத்திலும் தேரிலும் இருக்கும்போது சேவிப்பர். இவர்களில் மூப்படைகின்றவர்கள் அரசனுடைய களஞ்சியத்தில் அல்லது அடுக்களையில் வேலை செய்யும்படி விடப்படுவர்." (Chandra Gupta Maurya and his times pp.97-8.)

களே ஆலோசனையாளராக அவனால் தெரியப்பட்டனர். கூட்டங்கள் அரசிருக்கை மண்டபத்தில் நடந்தன. அரச கட்டளைகள் நீண்ட ஆலோசனைக்குப் பின்னரே வெளி யிடப்பட்டன. கட்டளைகள் வெளியானதும் பெருந்தரம் அல்லது பிரமராயன் எனப்பட்ட அமைச்சன் அவை களைத் திருமந்திர ஓலைக்காரன் என்னும் மூலஓலை காப் பாற்றும் அதிகாரியால் பொத்தகத்தில் எழுதும்படி செய் தான். பின்பு அவை படி எடுக்கப்பட்டு விடையில் அதி காரிகளால் இராச்சியத்தின் பல பகுதிகளுக்குப் போக்கப் பட்டன. அக்கட்டளைகள் கிராமக் கூட்டங்களுக்கும் புறிவிக்கப்பட்டன. இக் கூட்டங்களுக்கு அரசனுடைய மக்கள் அல்லது உறவினரே தலைவராகவிருந்தனர். அக் கட்டளைகள் முக்கியமுடையனவும் நிலையானவுமாயின் அவை கோயிற் சுவர்களில் எழுதப்பட்டன.

அரசனுக்குப் பொது அமைச்சர் அந்தரங்க அமைச் சர் முதலியோர் இருந்தனர். அரண்மனையில் தலைமைப் பெருந்தனம் (கருவூலம்) இருந்தது. அங்கிருந்து போர் வீரர், கருமகாரர் முதலியோர் சம்பளத்துக்கும் அரண் மனைச் செலவுக்கும் பணம் எடுக்கப்பட்டது. மாகாணங் களில் சிறுந்தனங்கள்[1] இருந்தன. இவை பெரும்பாலும் கோயில்களிலிருந்தன. இவைக்குப் பொருள் பெரும் பாலும் இறையிலி நிலங்களாலும், நன்கொடைகளாலும் வந்தது. இப்பொருளில் கோயிற் செலவு போக மீதி மக்கள் நலத்திற்காக்கப் பயன்படுத்தப்பட்டது.

அரசாங்கத்தில் மதிப்பும் ஒழுக்கமும் வாய்ந்த ஒற்ற இருந்தனர். இவர்கள் மாகாணத் தலைவர்களினைப் பற்றி செய்திகளை அறிந்து அரசனுக்குத் தெரிவித்தார்கள்

1. subtreasruies.

அரசன் மாறுவேடம் பூண்டு இரவிற்சென்று மக்களின் எண்ணங்களை அறிந்தான். ஒற்றர் துறவிகள், வணிகர் போன்ற வேடந்தாங்கி அயல் நாடுகளிற் சென்று பகை அரசரின் மறைவான செய்திகளை அறிந்து வந்தனர். அரசனைத் தலைவனாகக் கொண்டு ஆட்சி செய்யும் முறையை ஆரிய மக்கள் திராவிடரிடமிருந்து அறிந்தார்கள் என்பதற்கு ஆதாரங்கள் காணப்படுகின்றன. *அவர்கள் தமது மொழியையும் திராவிடரின் உதவியைப் பெற்றுத் திருத்திக் கொண்டனர்.*

* The Vedic theory is found in the Aitareya Brahmana. It asserts that the Devas i.e. their worshippers, the Hindus, originally had no king. In their struggle against the Asuras—when the Devas found that they were repeatedly defeated that they came to the conclusion that it was because the Asura had a king to lead them, they were successful. Therefore they decided to try the same experiment and they agreed to elect a king. It has a historical reference. It would refer to the tribal stage of the Aryans in India and it would suggest that the institution of kingship was borrowed from the Dravidians—Hindu polity—p. 5. K. P. Jayaswal M. A.

* Dravidian characteristics have been traced alike in Vedic and classical Sanskrit in the Prakrits or early popular dialects and in the modern vernaculars derived from them. The presence of the second series of dental letters the so called cerebrals in the language of the Rigveda and their absence from any other Indo European language is ascribed to Dravidian influence—The quarterly Journal of the Mythic society Vol. XVI-Kalipada Mitra M.A.B.L.

## மண்டல ஆட்சி

ஆட்சிக்குட்பட்ட நிலம் ஆளுகையின் பொருட்டு *மண்டலங்கள் அல்லது மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. மண்டலங்கள் நாடுகளாகவும் வளநாடுகளாகவும் பிரிக்கப்பட்டன. ஒவ்வொரு நாட்டிலும் பல கிராம சபைகள் இருந்தன. பல கிராமங்கள் சேராத கிராமம் தனியூர் எனப்பட்டது.



போர் வீரன்
(எல்லோரா - கி. பி. 500)

கிராமங்கள் சேரிகளாகவும் குடும்புகளா(வட்டங்கள்)கவும் பிரிக்கப்பட்டிருந்தன. சில கோட்டங்கள் அரசனின் மேற்பார்வையின்கீழ் நாட்டுக்குரிய தலைவனால் (குறுநில மன்னன்) ஆளப்பட்டன. மற்ற மண்டலங்களுக்கு அரசன் மண்டலிகரை நியமித்தான். அவர்களின் ஆட்சிக்காலம் அவர்களின் ஒழுக்கத்தையும் அரசனின் நல்லெண்ணத்தையும் பொறுத்திருந்தது. அரசன் மண்டலங்களின் போக்கைத் தான் செய்யும் சுற்றுப் பயணங்களாலும் ஒற்றர்களாலும்

*. இராச்சியம் பல மண்டலங்களாகவும், மண்டலங்கள் கோட்டங்களாகவும், கோட்டங்கள் கூறுகளாகவும், கூறுகள் நாடுகள் வளநாடுகளாகவும் வகுக்கப்பட்டிருந்தன. நாடுகளும் வளநாடுகளும், பல நகரங்களும் கிராமங்களுமுடையனவாயிருந்தன. அவற்றுட் பெரிய நகரங்கள் தனியூர் என்றும் மற்றவை ஊர்கள் பற்றுக்கள் குறைப்பற்றுக்கள் என்றும் பெயர் பெறும், —சோழவமிச சரித்திரச் சுருக்கம் - பக். 50 - கோபிநாதராவ்.

மண்டலிகன் வரிகளைத் தண்டினான்; நியாயத் தீர்ப்புச் செய்தான்; நாட்டில் அமைதியும் நியாயமும் நிலவும்படியும், ஆட்சி தொடர்பான கருமங்களை நன்கு நடைபெறும்படியும் செய்தான்.

மண்டலங்கள் முழுமையிலும் சுற்றுப் பயணஞ் செய்து மக்களோடு தொடர்பு வைத்திருத்தல், கணக்குகளைப் பரிசோதித்தல், சபைகளைக் கண்காணித்தல் முதலியன அவனுடைய கடமைகள். அவன் கோயிற்கணக்குகளையும் பரிசோதித்தான். கோயிற் கருமங்களின் குறைபாடுகள் ஐந்து பேரடங்கிய கூட்டத்தோடு மண்டலிகரால் ஆராயப்பட்டன.

மண்டலிகருக்கு அடுத்தபடியிலுள்ளவர் நாட்டுத் தலைவர். அவர் நாடுகண்காட்சி அல்லது நாடுவாகை எனப்பட்டார். நாட்டுத் தலைவர்கள் நாட்டின் ஆட்சிமுறையைக் கண்காணித்தார்கள்.

## கிராமசபை

ஒவ்வொரு கிராமத்தின் ஆட்சிக்கும் கிராமசபை பொறுப்பாயிருந்தது. மாகாண அதிகாரிகள் படைத் தலைவரோடு மாகாணம் முழுமையும் பயணஞ்செய்து விசாரணைகள் செய்தும் கணக்குகளை மேற்பார்த்தும் வந்தனர். கிராமசபைகள் கோயில்களில் கூடின. கிராம சபை உறுப்பினரின் எண் கிராமங்களுக்கு ஏற்றவாறு இருந்தது. சில சமயங்களில் ஐந்நூறுபேர்வரையில் இருந்தனர்.

அங்கத்தவர்களைத் தெரியும் வாய்ப்புக்காகக் கிராமம் பல குடும்பு (வட்டங்கள்) களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு குடும்பும் சபைக்கு அங்கத்தவர் ஆகக்கூடியவர்களின் பெயர் எழுதிய ஓலைநறுக்குக் கட்டொன்றை

அனுப்பிற்று. கல்வியும் சொத்தும் இருப்பது உறுப்பின ருவதற்குத் தகுதியை உண்டுபண்ணிற்று. கால்வேலிக்கு அதிகம் வரிகொடுக்கும் நிலமுள்ளவன் அல்லது தனது சொந்த நிலத்தில் வீடுகட்டி வாழ்பவன் தெரிவுக்குத் தகுதி யுடையவனுகக் கொள்ளப்பட்டான். அங்கத்தவனுகத் தெரியப்படுபவன் 35 வயதுக்கும் 70 வயதுக்கும் இடைப் பட்டவனுயிருத்தல் வேண்டும். அவன் கடந்த மூன்று ஆண்டுகளில் சபை உறுப்பினனுக இருந்தவனுதல்கூடாது. குடும்புகளுக்குச் சீட்டுகள் மூலம் அறிவிக்கப்பட்டபின் கூட்டம் கூட்டப்பட்டது. அதற்கு எல்லாக் கோயில் நம்பிகளும் அழைக்கப்பட்டனர். அவர்களில் முதியவன் சபைக்குத் தலைமைவகித்தான். அச் சீட்டுகள் எல்லாம் ஒரு வெறும் பானைக்குள் இடப்பட்டன. பின்பு சிறுவன் ஒருவன் அவைகளுள் ஒன்றை எடுத்தான். அப் பெயர் வாசிக்கப்பட்டது. அப் பெயருடையவன் குடும்பின் அங் கத்தவனுகத் தெரியப்பட்டான். இவ்வாறு ஒவ்வொரு குடும்பின் அங்கத்தினரும் தெரியப்பட்டார்கள்.

## குளங்களைக் கண்காணிப்போர்

குளங்கள் ஆண்டுதோறும் திருத்தப்படுவதை மேற் பார்ப்பதற்கு ஒரு சபை இருந்தது. அது குளத்தில் சேற்றை அப்புறப்படுத்துதல், நீர்ப்பாய்ச்சுதல், பயிரிடு வோருக்குச் சமமாக நீர் அளித்தல் முதலியவற்றைக் கண் காணித்தது. வீதிகளை அமைத்தல் அவைகளை அகல மாக்குதல் முதலியவைகளை மேற்பார்க்கும் சபையும் இருந்தது.

குடும்புவாரியாக அங்கத்தவர் தெரியப்பட்ட பின்பு சபை அவர்களைப் பலவேறு வேலைகளைப் பார்க்கும்படி

தெரிவுசெய்தது. ஒவ்வொரு அங்கத்தவனும் கடமை பார்க்கும் காலம் 360 நாட்களாகும். இச் சபையின், நிகழ்ச்சிகள் 'கர்ணத்தான்' என்னும் கணக்கனால் எழுதி வைக்கப்பட்டன. கோயில் நீங்கலாகக் கிராமத்தின் நிர்வாகம் சபையின் பொறுப்பில் இருந்தது.

## நியாயத்தீர்ப்பு

அரசன் தானே நேரில் நியாயத் தீர்ப்புச் செய்தான். உடன் கூட்டத்தார் அவனுக்கு ஞாயத்தீர்ப்பில் உதவி புரிந்தனர். சிறிய வழக்குகள் ஒவ்வொரு சேரியையும் மேற்பார்க்கும் சபையால் விளங்கித் தீர்ப்பளிக்கப்பட்டன. கொலைவழக்குகள் கிராமசபையால் விசாரணை செய்யப் பட்டன; சில சமயங்களில் மாகாணத் தலைவர் விசாரணை செய்தார். முதன்மையான வழக்குகள் படைத்தலைவனால் (சேனைபதியால்) ஐவர் அடங்கிய சபையின் உதவியோடு விசாரணை செய்யப்பட்டன. மிக முக்கியமான வழக்குகளே அரசனுடைய விசாரணைக்கு விடப்பட்டன. அரசன் நாடுகளைச் சுற்றிப் பயணம் செய்யும் காலங்களில் அவை விசாரணை செய்யப்பட்டன.

திருட்டுக்குற்றத்துக்குப் பணம் அபராதம் விதிக்கப் பட்டது. அத்தண்டம் தரும ஆசனம் எனப்பட்டது. ஒப்பந்தங்களைமீறிய குற்றங்களுக்குப் பணம் அபராதம் விதிக்கப்பட்டது; சில சமயங்களில் சிறைத் தண்டனையும் விதிக்கப்பட்டது. கண்ணுக்குக்கண் கையுக்குக்கை என்பதுபோல உறுப்புகளைக் களைந்துவிடுவது பொதுவான சட்டமாகவிருந்தது. கொதி எண்ணெயில் கைவைத்தல் போன்ற குற்றச்சோதனை அறியப்படாததன்று. கொலைக்குத் தண்டனை கொலையாகவிருந்தது. வேண்டுமென்று செய்யப்படாத கொலைக்கு 16 பசு மாடுகள் அபராதம்

விதிக்கப்பட்டது. இறந்தவரின் உயிர் ஆறுதல் அடைதற்குக் கிராமக் கோயிலில் எப்பொழுதும் எரியும்படி நெய்விளக்கு ஏற்றி வைக்கப்பட்டது. இராசத்துரோகத்துக்குச் சட்டப்படி தண்டனை விதிக்கப்பட்டது. இராசத்துரோகஞ் செய்தவரின் சொத்துக்கள் விற்கப்பட்டன. அவ்வாறு கிடைத்தபொருள் கோயில்களுக்கும் அறநிலையங்களுக்கும் கொடுக்கப்பட்டன. நகர காவலர் (police) தலைவன் தண்டநாயகன் எனப்பட்டான். நகர்காவலர் வீதிகளைக்காவல் புரிந்தனர். அவர்கள் பதிகாவல் என அறியப்பட்டார்கள்.

## படை

தமிழ் அரசர் ஒருவரை மற்றவர் கீழ்ப்படுத்தும்படி பெரும்பாலும் போர் விளைத்தனர். தேர், யானை, குதிரை காலாள் எனப் படை நால்வகைப் பட்டது. யானைவீரன் புலித்தோற் சட்டை அணிந்து யானை மீது இருந்தான். அவனைச் சூழ்ந்து படைக்கலந் தாங்கிய வீரர் சென்றனர். தேர்கள் நிறமூட்டிய துணிகளில் அலங்கரிக்கப் பட்டிருந்தன. அவை போர்க்களத்துக்கு நிரையாகச் சென்றன. போரில் வில், வேல், ஈட்டி, வாள், கவண், முதலிய பல வகை ஆயுதங்கள் பயன்படுத்தப்பட்டன. படைகள் அணி, உண்டை, ஒட்டு முதலிய பல அணிவகுப்புகளாக நின்று போர்செய்தன.



**குதிரை வீரன்**
(எல்லோரா)

முன் அணி ஆக்கம், கொடிப்படை, தார், தூசி எனப்பட்டது. பின்படை கூழை எனப்பட்டது.

நாடு இராணுவ சம்பந்தமான பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டிருந்தது. *படைத்தலைவன் அரசனோடு நேரில் தொடர்பு வைத்திருந்தான். படையின் பெரும் பகுதி காலாள். முன்னே குதிரைப் படையும் யானைப் படையும் சென்றன. தேர்கள் பெரிதும் பயன்படுத்தப்படவில்லை. அராபியர் கிரேக்கர் முதலிய அயல் நாட்டினரும் படையில் இருந்தார்கள். தூதுவரை அவமானப்படுத்துவதும் கொல்வதும் நீதிக் கேடாகக் கொள்ளப்பட்டது. இச்சட்டத்தை மீறுவதால் போர்கள் மூண்டன.

## வரி

நிலவரி தானிய வகையாகக் கொடுக்கப்பட்டது. பெரும்பாலும் விளைவில் ஆறிலொன்று வரியாகக் கொள்ளப்பட்டது. பட்டினங்களும் தோப்புகளும் பணவகையில் வரியை இறுத்தன. வரிக் கணக்கு எழுதும் ஏடு வரிப் பொத்தகம் எனப்பட்டது. வரிதண்டும் கருமிகள் (உத்தியோகத்தர்) இருந்தார்கள். ஒவ்வொரு நாட்டிலும் உள்ள பெரிய வீதியில் சுங்கம்தண்டப்பட்டது. சுங்கம் கொடாவிடின் பண்டங்களை அப்புறங் கொண்டு செல்லமுடியாமல் இருந்தது.

---

* படைத் தலைவர்கட்கு மகா சாமந்தன், சேனாதிபதி, சாமந்தன், தண்ட நாயகன் எனப் பல பெயர்கள் வழங்கி வந்தன. மகாசாமந்தன் என்பவன் எல்லாப் படைகட்கும் தலைவன். சிறுபடைகளைத் தண்ட நாயகர், சாமந்தர் என்போர் ஆளுவர் போலும்—படையாளர் போரில்லாக் காலங்களிற் பயிர்த் தொழில்கள் முதலிய செய்துகொண்டிருப்பது வழக்கம்- சோழவம்ச சரித்திரச் சுருக்கம்—ப 69.

போரில் கிடைத்த கொள்ளைப் பொருள், அரசாங்கத்துக்குரிய நிலங்கள், காடு, முத்துக் குளிப்புப் போன்ற வகையிலும் அரசனது கருவூலத்துக்குப் பொருள் வந்தது. இவைகளல்லாமல் கடை வரி, நெசவு வரி, செக்கு வரி போன்ற வரிகளும் வழக்கில் இருந்தன. கண்ணாலக் கடம் என்னும் கலியாண வரியும் இருந்தது.*

## நீர்பாய்ச்சும் வாய்ப்பு

அரசர் பயிருக்கு நீர்ப்பாய்ச்சும் வசதிகளை அதிகம் செய்தனர். கரிகாற் சோழன் கட்டிய காவிரி அணை கிட்டிய காலம் வரையில் இருந்தது. ஆறுகளும், கிளை ஆறுகளும் நீர்ப்பாய்ச்சும் வாய்ப்பின் பொருட்டு மறித்துக் கட்டப்பட்டன. திரிச்சிறுப்பள்ளியில் கங்கைகொண்ட சோழபுரத்திலுள்ள குளத்தின் அணைக்கட்டுப் பதினாறு மைல் நீளமுள்ளது. பல வெட்டு வாய்க்கால்களும் வெட்டப்பட்டன. செல்வர் வீதி ஓரங்களில் கிணறுகள் வெட்டிச் சுமைதாங்கி அமைத்தார்கள். வீதிகளின் அபாயமான இடங்களில் போர்வீரர் நிறுத்தப்பட்டிருந்தனர். ஆகவே போக்கு வரத்துச் செய்வோர் திருடர் பயமின்றிச் சென்றனர். கால்வாய் வெட்டுதல் ஏரி வெட்டு

---

* போரில் மடிந்த வீரர்க்கும் நிரைமீட்சி வேட்டை முதலியவைகளில் இறந்த வீரர்கட்கும் அரசனாலாயினும் இறந்தவன் பந்துக்களாலாயினும் அவர்களுடைய ஞாபக சின்னமாக அவர்களைப்போல உருச்சமைத்துக் கல்லொன்று நடுவது வழக்கம்—ஷை.

* **சோழ அரசர் காலத்து இருந்த வரிகள் சில:** அக்காடிப் பட்டம் (சந்தைவரி), உப்பாயம், இலாஞ்சினைப்பேறு, சந்தி விக்கிரகப்பேறு, பஞ்சுபிலி, வாசல்வினியோகம், படையிலார் முறைமை, கூற்றிலக்கை, கடைக்கூட்டிலக்கை, தண்டவிலக்கை, விடைப்பேர், மாதப்பட்டி, அரைக்கால்வாசி, ஊசி வாசி, விலைத் தண்டம், நீராணி, காவேரிக்குலை, தேவகுடிமை, ஆனைக்கூடம், குதிரைப்பந்தி.

தல் போன்றவைகள் மக்களால் கட்டாயப்படுத்திச் செய்விக்கப்பட்டன. அவ்வகைவேலை ஊழியம், ஆள்மாஞ்சி எனப்பட்டது. ஆற்றுக்கால்வெட்ட, ஏரிகுழிவெட்ட, சுமை தூக்க என்னும் சொல்வழக்குகள் பட்டையங்களில் காணப்படுகின்றன. அரசருக்குப்புரியும் கட்டாய ஊழியம் இலங்கையில் இராசகாரியம் எனப்பட்டது.

## பொழுதுபோக்கு

மற்போர், சிலம்பம், தேரோட்டம், யானைப்போர், குதிரை ஓட்டம், மாட்டுப் போர், ஆட்டுப் போர், கோழிப் போர், காடை கவுதாரிப்போர் என்பன மக்களின் பொதுவான பொழுது போக்குகளாகும். பெண்கள் வீட்டில் அடைக்கப்பட்டு இருக்கவில்லை; அவர்கள் அம்மானை, பந்து, பாட்டு, ஆட்டம், கும்மி, குரவை விளையாட்டுகளிற் பொழுது போக்கினர்; கிளி நாகணவாய் முதலியவைகளை வளர்த்தனர்.

## போக்குவரத்து

முற்காலப் போக்குவரத்து பெரும்பாலும் கால்நடை, வண்டி, பல்லக்கு, தண்டிகை, கழுதை, எருது, யானை,

---

**விசயநகர அரசர் காலத்து வரிகள் சில:** பதிகாவல், காரணயோதி, தலையாரிக்காம், நாட்டுக்கணக்குவரி, அழுக்கு நீர்ப்பாட்டம், பிடாரிவரி, விபூதிக்காணிக்கை, ஆதிபச்சை,. கார்த்திகைப் பச்சை, திருப்புதியீடு (முதல் பழுக்கும்பழம்), பிரசாதகாணிக்கை, தறிக்கடமை, செக்குக்கடமை, அரிசிக்கடமை, பொன்வரி, செம்பொன்வரி, புல்வரி, நூல்வரி, பட்டுநூல் வரி, மரக்கலவரி, படிக்காணிக்கை (போர்வீரருக்கு ஆம்செலவு) கோட்டை மகமை, நாட்டுச்சிக்கம், தோரணக்காணிக்கை, தரிசன காணிக்கை, கோட்டைக்கு, வெட்டிவரி, ஊசிவரி, குதிரை விலாடம். வரிகளையன்றி மக்கள் கூலியின்றிக் கட்டாயவேலையும் வாங்கப்பட்டார்கள். அவ்வேலை வெட்டி, முட்டி, வெகாரி எனப்பட்டது. அவ்வேலை செய்பவர் வெட்டிமுட்டி ஆள் எனப்பட்டனர்.

குதிரை, தேர் வகைகளாயிருந்தன. ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்திற்குப் பண்டங்கள் கொண்டு செல்வதற்குப் பொதிமாடுகளும் கழுதைகளும் வண்டிகளும் பயன்படுத்தப் பட்டன. அரசரும் பெருமக்களும் தேர் பல்லக்கு, யானை முதலியவைகளில் சென்றனர்.

கடலிற் செல்வதற்குப் பலவகை மரக்கலங்கள் இருந் தன. மரக்கலங்களின் முன்புறம், சிங்க முகம், யானை முகம், குதிரை முகம் போன்று செய்யப்பட்டிருந்தது. மரக்கலங்களுக்கு பாய் மரங்களும் பாயும் இருந்தன.

## அளவைகள்

எண்ணெய், நெய், தயிர் போன்றவையும் தானியங் களும் அளந்து விற்கப்பட்டன. பொன் வெள்ளி முதலி யவை நிறுத்துவிற்கப்பட்டன. **தானிய அளவை** ; 5 செவிடு 1 ஆழாக்கு ; 2 ஆழாக்கு 1 உழக்கு ; 2 உழக்கு 1 உரி ; 2 உரி 1 நாழி ; 8 நாழி 1 குறுணி ; 2 குறுணி 1 பதக்கு ; 4 குறுணி அல்லது 2 பதக்கு 1 தூணி ; 3 தூணி அல்லது 12 குறுணி 1 கலம்.

பழைய பட்டையங்கள் சிலவற்றால் பெரும்பாலும் பொருள்கள் பண்டமாற்றுச் செய்யப்பட்டனவென்று அறிகின்றோம். 2 படி அரிசிக்கு 5 படி நெல்லுக் கொடுக் கப்பட்டது. 5 படி நெல்லுக் குத்துவதற்கு அரைப்படி அரிசி கூலியாகக் கொடுக்கப் பட்டது. ஒரு நாழி நெல் 1/16 நாழி நெய்யுக்கும் ஒரு நாழி தயிர் 10ப் பாக்கு, 20 வாழை இலை அல்லது 1/16 நாழி நெய்க்கும் பண்டமாற் றுச் செய்யப்பட்டது. நெல்லும் தயிரும் ஒரே பெறுமதி உடையனவாயிருந்தன வென்பது குறிப்பிடத்தக்கது. நாள் வாழ்க்கைக்கு வேண்டிய பண்டங்களை வாங்குவதற்கு

நெல் பயன்படுத்தப்பட்டது. பணப்புழக்கம் இருந்த போதும் பொதுவாக நெல்லை பணத்தைப்போலப் பயன் படுத்தப்பட்டது.

**பொன் வெள்ளி நிறை:** 1 கழஞ்சு 20 மஞ்சாடி; 1 மஞ் சாடி 2 குறுணி; 1 மா 1/10 மஞ்சாடி; 1 காணி 1/40 மஞ்சாடி.

*" அக்காலத்தே நிறுத்தல், முகத்தல் முதலிய அளவு கட்கும், பொன் இரத்தினங்கள் நிறுத்தற்கும், பொன் மாற்று நோக்குதற்கும் அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட மரக்கால் முதலியன விருந்தன. அரசன் முத்திரையிட்ட மரக்காலுக்கு இராசஇராசன் காலத்தில் இராசகேசரி என்பது பெயர். இதற்குச் சமானமான தஞ்சாவூர்க் கோயில் மரக்காலுக்கு ஆடவல்லான் என்பது பெயர். ஆனல் நாடுதோறும் மரக்கால் பெயர்கள் மாறுபட்டிருந் தன. அரசாங்க முத்திரையிட்ட எடைக்கல்லுக்குக் குடிஞைக்கல் என்று பெயர். தஞ்சாவூர்க் கோயிலில் இதற்குச் சம எடையுள்ள கல்லுக்கு ஆடவல்லான் என்பது பெயர். (இப் பெயர்கள் சிவபிரான் பெய ரால் இடப்பட்டன) பொன்மாற்றுக்கு வைத்திருந்த ஆணிக் குத் தண்டவாணியென்பது பெயர்."

## தமிழர் திருமணம்

பருவம் அடைந்த ஆடவரும் மகளிரும் ஒரு வரை ஒருவர் காதலித்துச் சிறிதுகாலம் பிறர் அறி யாது சேர்ந்து ஒழுகுவார்கள் என்றும் பின் ஆடவன் தனது காதலியைத் தனது ஊருக்கு யாருமறியாது கொண்டு சென்று அங்கு மணந்துகொள்வான், அல்லது மணமகளது பெற்றோரின் இசைவைப் பெற்று அவள் இல்லத்திலேயே

* சோழ வமிசசரித்திரச் சுருக்கம். ப. 66.

அவளை மணந்துகொள்வான் என்றும் சங்கச் செய்யுட்கள் கூறுகின்றன. இப் பாடல்கள் பழைய மரபைப் பின்பற்றிச் செய்யப்பட்டனவேயன்றி அக் காலத்திருமணம் அவ்வாறு நிகழ்ந்ததெனத் துணிதல் முடியாது.

அக் காலத்தில் ஆடவன் ஒருவன் மணஞ் செய்ய வேண்டியிருந்தால் அவன் சில முதியோரைப் பெண்கேட்கும்படி பெண்வீட்டுக்கு அனுப்புவான். பெண்ணின் பெற்றோர் பெண்கொடுக்க இசைந்தனராயின், கணி எனப்பட்ட சோதிடனால் குறிக்கப்பட்ட நல்லநாளிலே மணமகன் தனது சுற்றத்தாருடன் மணமகள்வீட்டுக்குவந்து பெண்ணை மணந்து தனது வீட்டுக்குக் கொண்டுபோவான். திருமணத்துக்கு முன் பெண்ணுக்கு விலையாக மணமகன் பரியம் எனப் பொருள் வழங்குவான். இவ் வாறு கொடுக்கப்படும் பொருள் சில இடங்களில் வளர்ப்புக்கூலி எனவும் வழங்கும். பெண்களை விலைகொடுத்து வாங்கி மணத்தலாகிய வழக்கத்தின் நிழலே பரியம் எனச் சிலர் கூறுவர். திராவிட மக்களுள் சில கூட்டத்தினர் பெண்களை விலைகொடுத்து வாங்கி மணந்துகொள்ளும் வழக்கம் இன்றும் காணப்படுகின்றது. முற்காலத்தில் புரோகிதன் உதவியின்றியே திருமணங்கள் நடந்தன. அக் காலத் திருமணச்சடங்கு எவ்வாறிருந்ததென்பதைச் சங்கநூல்களைக் கொண்டு அறிதல்கூடும். அகநானூற்றில் கூறப்பட்டுள்ளதை இங்கு தருகின்றோம்.

“சோறு பருப்பிட்டுச் சமைக்கப்பட்டது. பலர் கூடி உண்டபின்பும் சோறு குவிந்துகிடந்தது. நிரையாகக் கால்களை நட்டுப் பந்தரிடப்பட்டிருந்தது. தரையில்வெண் மணல் பரப்பப்பட்டிருந்தது. விளக்குகள் கொளுத்தி வைக்கப்பட்டன.

பூப்பை நாளின் விடியற்காலையில் தீயகோள்கள் அகன்ற நல்ல நேரமாக விருந்தது. தலையிலே குடத்தையும் கையிலே மட்பாத்திரத்தையும் வைத்துக்கொண்டு பெண்கள் வந்தார்கள். அவர்கள் கையில் வைத்திருந்த பாத்திரத்தை ஒருவர் கையிலிருந்து ஒருவர்கைக்கு மாற்றினார்கள். அப்பொழுது முதிய பெண்கள் பெரிய ஆரவாரஞ்செய்தனர். பின்பு ஆண்மகவை யீன்றவர்களும், வயிற்றில் அழகு தேமல் உடையவர்களும் அழகிய நகைகள் அணிந்தவர்களுமாகிய பெண்கள் முன்னே வந்தார்கள். மணமகளின் தலையில் நீரை ஊற்றினார்கள். அப்பொழுது நீரில் கிடந்த பூவும் நெல்லும் கூந்தலில் கிடந்து விளங்கின. அப்பொழுது அவர்கள் "நீ கற்பில்வழுவாது கணவனுக்கு இனியளாகவிருந்து நெடுங்காலம் வாழ்வாயாக" என வாழ்த்தினார்கள். அன்று மாலைக்காலம் வந்தது. பெண்கள் வந்து கூடினார்கள். "நீ வீட்டுக்குப் பெருந்தலைவியாருக" என்று வாழ்த்தினார்கள். சுற்றத்தவர் அவள் கையைப் பிடித்து மணமகனிடம் கொடுத்தார்கள்." (அகம்-86)

"நல்ல அரிசியைச் சமைத்த நெய்கலந்த சோற்றைச் சுற்றத்தவர் முதியவர்களுக்குக் கொடுத்தார்கள். நற்சகுனம் காட்டும் பறவைகள் தெளிந்த வானத்தே பறந்தன. திங்கள் உரோகிணியோடு சேருகின்ற குற்றமில்லாத நல்ல நேரம் வந்தது. பெருக்கிச் சுத்தஞ்செய்த வீடு அலங்கரிக்கப்பட்டது. எல்லோரும் கடவுளைத் தொழுதார்கள். பெரிய மேளமும் மணமுரசும் ஒலித்தது. மணவினையைக் காண விரும்பிய பெண்கள் விரைந்துவந்து கூடினார்கள். அறுகங்கிழங்கை வெள்ளிய நூலாற்கட்டி வாகைப் பூவின் மேல் வைக்கப்பட்டதும், மணல் பரப்பப்பட்டதுமாகிய பந்தலின்கீழ் தமர் அவளை மணமகனிடம் கொடுத்தார்கள்.

மணவினையைக் கண்ட பெண்கள் தமது வீடுகளுக்குச் சென்றார்கள்.” (அகம்-136)

## அலங்காரம்

தமிழ் மக்கள் தமது உடம்பையும் தாம் பயன் படுத்திய ஒவ்வொரு பொருளையும் அலங்கரித்தார்கள். வீட்டுச்



**நாட்டியம்**
( சோழர் கால ஓவியம் )

சுவர்களில் அழகிய ஓவியங்கள் எழுதப்பட்டன. பெண்கள் முற்றங்களில் அழகிய கோலங்களிட்டனர். வீடுகளைத் தாங்கும் தூண்கள், கைமரங்கள், நிலைகள், கதவுகள், வீட்டின் முன்புறங்கள் தானும் அழகிய வேலைப்பாடுகள் பெற்றிருந்தன. தென்னிந்திய கோயில்களில் சுவர்களிலும் மதில்களிலும் கோபுரங்களிலும் அழகிய உருவங்கள் வெட்டப்பட்டிருத்தலை நாம் காணலாம். இந்திய சிற்பி

கள் கற்களை மரத்தைப்போலப் பயன்படுத்தி அதில் பல கண்கவரும் வேலைப்பாடுகள் செய்துள்ளார்கள். வீட்டில் பயன்படுத்தும் கட்டில் முக்காலி நாற்காலி, மணை ஆயுதங் களின்பிடி, நீர் அருந்தும் பாத்திரங்களும் அழகிய வேலை பாடுகளுடையனவாயிருந்தன. தென்னிந்திய கோயில் களிலும், அமராவதி, அசந்தா, எல்லோரா முதலிய இடங் களிலும் காணப்படும் சிற்பங்கள் திராவிட மக்களின் அலங் கார விருப்பத்தைத் தெரிவிக்கின்றன.[1]

பெண்கள் தமது கூந்தலைப் பலவகையாக வாரி முடிந் தார்கள். கூந்தல்மீது பலவகைப் பூக்களைச் செருகி வேய்ந்தார்கள். சுறுமீன், வலம்புரிச்சங்கு, பிறை, இரு பக்கமும் யானை குடத்திலிருந்து நீர் கொட்டுவதும் நடுவே இலக்குமி வீற்றிருப்பதுமாகிய வடிவுடைய சீதேவியார் போன்ற அணிகலன்களை அணிந்தார்கள். கொண்டையில் பலவகைப் பூக்களையும் மாலையையும் சூடினார்கள்; சந்த னம் குங்குமம் முதலியவைகளைப்பூசி உடலை அழகு படுத்தி னார்கள்; உடம்பில் மஞ்சள்பூசிக் குளித்தார்கள். மார்பு, தோள்களில் தொய்யில் என்னும் ஒருவகை குழம்பைப் பூசி அதன்மேல் கரும்பு பூங்கொடி முதலியவைகளை எழுதி அழகு செய்தார்கள். காதில் தோடு அல்லது குழை

1. The sculpture of Sanchi and Amaravathi and the Ajanta Cave paintings and the sculptures of Orissa (Buvaneswar) prove that in its forms also Hindu jewelry has remained unaltered during the last two thousand years. The ornaments of Sanchi are of the same archaic character as those still made in central India and the Central Provinces and by the aboriginal tribes of the Bengal and Bombay presidency while those of Amaravathi shows more elaboration and finish of Dravidian jewelry of Madras presidency

—Industrial arts of India—p. 188.

அணிந்தார்கள். வறிய மக்கள் காதில் ஓலையைச் சுருளாக்கிச் செருகினார்கள். முத்துமாலை, பவளமாலை, சங்கிலி, குறங்குசெறி, கவானணி, பட்டிகை, சதங்கை, கிண்கிணி, சிலம்பு, கழல், வளை, மோதிரம், மேகலை என்பன அவர்கள் அணிகலன்களிற் சில. திருப்பாதம், திருமுடி, புள்ளித் தொங்கல், கொற்றக்குடை, பொற்பூ, திரள்மணிவடம், காறை, அடிக்காறை, அன்னம், கிளி, சோனகச்சிடுக்கு, மகுடம், வாளி, வடுகவாளி, சூடகம், கண்மலர், சட்டி, தாலி, தாலிமணிவடம், கண்டஞான், பொட்டு, பதக்கம், ஏகாவலி, கால்வடம், கமலம், செடி, வாகுவலயம், துடர் என்பன போன்ற பல அணிகலன்களும் அணியப் பட்டன.

## இசை

* ஒவ்வொரு நிலத்திலும் ஒவ்வொரு இசைவழங்கிற்று. குறிஞ்சி நிலமக்கள் குறிஞ்சிப் பண்பாடினார்கள். முல்லைநில மக்கள் முல்லைப் பண்பாடினார்கள். அது இன்று மத்தியமாவதி எனப்படும். மருதநில மக்கள் மருதப் பண்பாடினார்கள். அது கேதாரம் எனப்படும். நெய்தலுக்குரிய பண் இன்று புன்னாகவராளி எனப்படும். பாடி ஆடும்போது கொட்டப்படும் பலவகை மேளங்கள் வழங்கின. வெவ்வேறு ஓசைகளைப் பிறப்பிக்கும் பறைகள் வெவ்வேறு காலங்களில் கொட்டப்பட்டன. மாடுகளைக் கொள்ளையிடும்போது கொட்டப்படுவது ஏறுகோட்பறை, வெறியாடும்போது அறையப்படுவது முருகியம். மணக்



யாழ்

* P.T.S. Iyengar.

காலத்தில் சாற்றப்படுவது மணமுழவு. தேரிழுக்கும் போது முழக்கப்படுவது தேரோட்டுப்பறை. நெல்லறுக்கும் போது தட்டப்படுவது நெல்லரிக்கிணை. அரசன் வெளிக் கிளம்பும்போது ஒலிக்கப்படுவது புறப்பாட்டுப்பறை. மீன் பிடித்தற்குச் செல்லும்போது கொட்டப்படுவது மீன் கோட்பறை. சூறை ஆடும்போது அடிக்கப்படுவது சூறை கோட்டை.

போர்க்காலத்தில் யானை, குதிரை காலாட்படைகளுக்கு உற்சாகம் மூட்டும் பொருட்டுப் பலவகை வாத்தியங்கள் ஒலிக்கப்பட்டன. அவை இயம், இசைக்கருவி, வாத்தியம், வாச்சியம் எனப்பட்டன. அவை தோற்கருவி துளைக்கருவி, நரம்புக்கருவி, மிடற்றுக்கருவி, துளைக்கருவி, என நால்வகைப்பட்டன. தமிழருக்குடைய ஏழிசைகள் குரல், துத்தம், கைக்கிளை, குரல், உழை, விளரி, தாரம். மூங்கில், கொன்றைப்பழத்தின் கோது முதலியவைகளால் செய்யப்பட்ட குழல்களும் வழங்கின. எக்காள வகைகளுள் தாரை, காளம், காகாளம், அம்பியம், சின்னம் முதலியவையும், கொம்புவகையில் கோடு, இரலை, வயிர் முதலியவும் இருந்தன. நரம்புக்கருவியில் சிறப்புடையது யாழ் *அவைகளுக்கு ஏழு, இருபத்தொன்று அல்லது அதற்கு மேற்பட்ட நரம்புகள் இருந்தன.

---

* Indian musical instruments are remarkable for beauty and variety of their forms which the ancient sculptures and paintings at Ajanta show how they remained unchanged for the last two thousand years. The harp is identical in shape with Assyrian harp represented on the Nineveh sculptures and the *Vena* of equal antiquity. The Hindus claim to have invented the fidle bow - Industrial arts of India - p. 232 George. C. M. Bird Wood.

பறை, முரசு, பேரிகை, ஆகுளி, எல்லரி, சல்லிகை, கிணை முதலியன மேளவகைகளுட்சில. இன்னும் இலங்கைத்தீவில் வழங்கும் மேளவகையில் எழுபதுக்கு மேலுண்டு. தாரை உடுக்கை முதலியன பாணர் கையில் கொண்டுதிரிந்து அடித்துப்பாடும் சிறியமேளங்கள்.

## தோற்கருவிகள்

" பேரிகை படக மிடக்கை யுடுக்கை
சீர்மிகு மத்தளஞ் சல்லிகை கரடிகை
திமிலை குடமுழாத் தக்கை, கணப்பறை
தமருகந் தண்ணுமை தாவி றடாரி
யந்தரி முழவொடு சந்திர வளைய
மொந்தை முரசே கண்விடு தூம்பு
நிசாளந் துடுமை சிறுபறை யடக்க
மாசி றகுணிச்சம் விரலேறு பாகந்
தொக்க வுபாங்கந் துடிபெரும் பறையென
மிக்க நூலோர் விரித்துரைத் தனரே "

## உடை

பருத்தி இந்திய நாட்டில் உண்டாகும் செடி, மற்றைய நாட்டுமக்கள் ஆடை இல்லாமல் இருந்தபோது அல்லது தோலை உடையாகக் கொண்டிருந்த காலத்தில் இந்திய மக்கள் பஞ்சை நூலாக்கவும், நூலால் ஆடை நெய்யவும் ஆடைக்குப் பலவகைச், சாயங்கள் ஊட்டவும், அறிந்திருந்தனர். இதற்குச் சான்று பழைய சிந்துவெளி நகரங்களிற் கிடைத்துள்ளது. இந்தியநாட்டு வெப்பநிலைக் கேற்ப மக்கள் அற்ப உடையையே அணிந்தனர். ஆடவர் முழங்கால்வரையும் உடை உடுத்து அரையில் கச்சுக்கட்டியிருந்தனர். மிகப்பழங்கால மக்கள் தலையைச்சுற்றி நாடாக்கட்டியிருந்தனர், பின்பு நாடா பாகைஆக மாறிற்று.

பெண்கள் அரையில் மாத்திரம் உடை அணிந்தனர். பெண்களிற்சிலர் மார்பைக் கச்சுக்கட்டி மறைத்தனர். பெரும்பாலும் பெண்கள் அரைக்குமேல் உடை அணியவில்லை. இதனை சான்சி, அமராவதி, பிற்காலச் சிற்பங்



**வீட்டு வேலை செய்யும் பெண்கள்**
(சான்சிச் சிற்பம் கி. மு. 200)

களிலும் கோயிற் சுவர்களிலும் கோபுரங்களிலும் காணப் படும் உருவங்களையும் கொண்டு நாம் நன்கு அறியலாம் இறவுக்கை அணியும் வழக்கம் அக்காலத்தில் அரண்மனை களிலிருந்த கிரேக்க பெண்களால் கொண்டுவரப் பட்டிருக் கலாமெனச் சிலர் கருதுகின்றனர். அக்காலத்தில் கிரேக் பெண்கள் இந்திய நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்பட்

மையை ஸ்ராபோ (Strabo) போன்ற வரலாற்றாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.*

1" பருத்தி இந்திய நாட்டுக்கு உரிய செடி. மற்றைய நாடுகளில் மக்கள் தோல்களை உடுக்கும்போது அல்லது உடையின்றியிருக்கும்போது தமிழ் மக்கள் பஞ்சிலிருந்து நூல்நூற்று நூலால் அழகிய ஆடைகளைச் செய்து உடுத்தார்கள்.[1] தற்காலக் குடியிருப்புகளில் நூல்நூற்கும் கதிர்கள் கண்டெடுக்கப்பட்டன. மொகஞ்சதரோ காலத்திலேயே மக்கள் பஞ்சிலிருந்து ஆடை நெய்யவும், அதற்குச் சாயமூட்டவும், அழகிய வேலைப்பாடுகள் செய்யவும் அறிந்திருந்தார்களென்பது அங்குகிடைத்த மண்பாவைகளைக்

---

* According to Strabo, young female musicians of western origin were articles of import, certain to please in India. Professionally there was little to choose between them and the young well-made girls intended for debouchery offered by the Greeks to the kings of the ports of Gujarat along with musical instruments—Kannada passages in the Oxyrhyncus Papyri no 413-p. 17.

1. P. T. S. Aiyengar.

1. Our knowledge of the costumes of Mohenjo Daro people is scanty as naked figures preponderate. A shawl is worn by a male figure covering the left shoulder and passed under the right arm. It is difficult to say what was worn under the shawl, but the heroes and deities wore a thin strip of cotton on their loins. Some very rare fiqurines are depicted wearing kilt or drawers. The hair was tied with a woven fillet. The woven *sari* terminating well above the knees always fastened with girdles and in one case with a *kamar*band is also seen. The narrow strip of cloth used as sari at Mohenjo Daro very much resembles the *niva* mentioned in Vedic literature. Vol. I-p. 53—Dr. Moti chandra M. A. Ph. D.

கொண்டு நன்கு அறியப்படுகின்றது. மக்கள் ஆடை நெய்ய அறிவதன்முன் மரப்பட்டைகளையும் தழைகளையும் உடுத்தார்கள். பஞ்சு உடைக்குமுன் மரவுரி தோன்றியதாதலின் அது துறவிகளுக்கும் தூய உடையாகப் பிற்கால மக்களால் கருதப்பட்டது. ஆடையைக் குறிக்க ஐம்பதிற்கு மேற்பட்ட பெயர்கள் தமிழிற் காணப்படுகின்றன. ஒவ்வொரு பெயரும் அக்காலத்தில் வழங்கியவெவ்வேறு வகை ஆடையைக்குறிக்க வழங்கியிருத்தல் வேண்டும். சங்ககால இலக்கியங்கள் பாலாவிபோன்ற ஆடை, இழை சென்ற இடம் அறியமுடியாது நுண்ணிய நூலால் நெய்யப்பட்ட ஆடைகளைப்பற்றிக் கூறுகின்றன. முல்லை நிலத்தில் வாழ்ந்த மக்கள் ஆட்டு மயிரிலிருந்து கம்பளி நெய்தார்கள். ஆடைகள் வெளுத்துக் கஞ்சியிடப்பட்டன. ஆடவர் வெளுத்துக் கஞ்சியிட்ட மடியைக் குலைத்து அரையிற்கட்டி அதன் மேல் ஒரு ஆடையை வரிந்து கட்டினார்கள். ஆடவர் சட்டை தரிக்கவில்லை சட்டைதரித்தல் ஊழியம் புரிவோருக்குரியதாக விருந்தது. இறவுக்கை அணிதல் இரண்டாயிரம் ஆண்டுகளின் முன் இந்திய அரசரின் மெய்காப்பாளரா யிருந்த கிரேக்கப் பெண்களால் புகுத்தப்பட்டதாகலாம். பழைய ஓவியங்களிலும் சிற்பங்களிலும் இறவுக்கை காணப் படவில்லை. பெண்கள் தமது தனங்களை அசையவொட்டா மல் கச்சுக்கட்டியிருந்தார்கள். ஆடவர் தலைப்பாகை அணிந்தார்கள், உத்தரியம் தரித்தார்கள். கோவணம் கட்டினார்கள்.*

---

* Cotton manufacture did not obtain a real footing in Europe until last century at a date before history. The art was carried from India to Assyria and Egypt; but it was not until the thirteenth century that the cotton plant was introduced into southern Europe where its wool was at first used to make paper;

## பயிர்செய்கை

தமிழ் மக்கள் பயிர்ச் செய்கையையே முதன்மையான தொழிலாகக் கொண்டனர். "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்" என வள்ளுவரும் உழவின் சிறப்பை முதன்மையாகக் கூறியுள்ளார். பிற்காலத்து விளங்கிய கம்பரும் ஏரெழுபதில் வேளாண் சிறப்பை நன்கெடுத்தியம்பியுள்ளார். பயிரிடும் நிலங்கள் நன்செய், புன்செய் என இரு வகைப்படும். நெல் விளையும் வயல் நன்செய் எனவும் மற்றைய தானியங்கள் விளையும் நிலம் புன்செய் எனவும் பட்டன. பயிரிடப்படாத நிலம் தரிசு எனப்பட்டது. வேள் என்பது நிலத்தைக் குறிக்கும் பெயர். நிலத்தைத் திருத்திப் பயிரிடுவோர் வேள் ஆளர் எனப்பட்டனர். ஆளர் என்பதற்கு ஆள்பவர் என்று பொருள். வெள்ளத்தை ஏரி குளங்களில் தேக்கி வைத்து வெள்ளத்தை ஆண்டமையின் வேளாளர் வெள்ளாளர் எனவும் படுவர். நிலங்களையுடைய வேளாளர் வேள் அல்லது வேளிர் எனப் பட்டனர். இவர்கள் குறுநில மன்னராகவும் இருந்தனர். வேளாளர் கொடையாற் புகழ்பெற்றோர். இதனால் வேளாண்மை என்னும் சொல்லுக்குக் கொடை, உபகாரம் என்னும் பொருள்கள் உண்டு. "இருந்தோம்பி இல் வாழ்வதெல்லாம் விருந்தோம்பி—வேளாண்மை செய்தல் பொருட்டு" என்னும் குறளில் வேளான்மை உபகாரம் என்னும்பொருள் தருதல் காண்க. சேர சோழ பாண்டிய அரசர் வேளாண் மரபில் தோன்றியவர்களே யாவர்.

The manufacture of it into cloth in imitation of the fabrics of Egypt and India was first attempted by the Italian States in the thirteenth century—Industrial arts of India p. 241.

தமிழ் நாட்டில் நிலம் ஐந்து வகையினதாக விருந்ததென முன்னேரிடத்திற் கூறினேம். ஒவ்வொரு நில மக்களும் வெவ்வேறு பெயரால் அறியப்பட்டார்கள். ஒரு நிலத்தில் வாழும் மக்கள் இன்னொரு நிலத்தில் வாழ்ந்த மக்களுக்குத்தாழ்ந்தவரென்றே உயர்ந்தவரென்றே கொள்ளும் கொள்கை அக் காலத்தில் உண்டாகவில்லை. செல்வம், வறுமை, ஒழுக்கம், ஒழுக்கக் கேடு என்பவை போன்ற தன்மைகளால் உயர்வு தாழ்வுகள் கொள்ளப்பட்டன. உயர்குடி என்பது பாவம் பழிகளுக்கு அஞ்சும் குடி என்பது பொருள். வள்ளுவர் தமது நூலில் அடிக்கடி குறிப்பிடும் குடிப்பிறப்பு இவ்வியல்பினதாதலை அறிய மாட்டாதார் அது வடநாட்டார் வருணத்தைத் தழுவியதென மருண்டு கூறுவர். "பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையால்" என வள்ளுவர் பிறப்பினுல் சாதியுண்டென்பாரை மறுத்தமை காண்க.

மக்கள் படிப்படியே திருத்தமடைந்து பயிர்ச் செய்கை வளர்ச்சியடைந்தது. பெரும்பாலும் நகர் மருத நிலத்திலேயே தோன்றிற்று. உலகிலே பழைய நாகரிகச் சிறப்புப் பெற்று விளங்கிய நகரங்கள் எல்லாம் வேளாண்மை செழித்தோங்கிய ஆற்றேரங்களிலேயே விளங்கின. வேளாண்மையால் செழிப்புற்ற நாடுகளில் வாணிகத்தின் பொருட்டும் உணவின் பொருட்டும் பற்பல தொழில் புரியும் மக்கள் வந்து தங்குவாராயினர். தந்தையின் தொழிலை மகன் செய்தல் என்பதுபோலக் கால்வழி கால்வழியாக ஒவ்வொரு குடும்பமும் பெருகியபோது ஒவ்வொரு குடும்பமும் தனித்தனிச் சாதியாகப் பெருகியது.

நிகண்டு நூல்களிற் காணப்படும் சாதிப்பெயர்கள் தொழில்களையே குறித்தல் காண்க. தனித்தனிக் கூட்டமாகப் பெருகிய மக்கள் தத்தமக்குள்ளேயே திருமணங்கள் செய்துகொள்ளும் வழக்கம் நீண்ட காலமாக இருந்து வருதலாலும் சாதிக் கட்டுப்பாடு வலி அடைந்தது.

தமிழ் நாட்டில் அந்தணர் அரசர் வணிகர் வெள்ளாளர் என்னும் நான்கு பெரும் பிரிவினர், இருந்தனர். இவர்களல்லாத கைத்தொழிலும் ஏவற்றொழிலும் செய்யும் மக்களும் இருந்தனர். முன் கூறிய நால்வரும் உயர்ந்தோரென்றும், பின் கூறிய இருவகையினரும் தாழ்ந்தோரென்றும் கொள்ளப்பட்டனர்.

அந்தணரென்போர் துறவிகள். கோயிற் பூசை செய்யும் மக்களையும் குறிக்க இப்பெயர் பிற்காலத்தில் வழங்குவதாயிற்று. ஆட்சி புரிவோர் அரசர் எனவும், வாணிகம் புரிவோர் வணிகர் எனவும், வேளாண்மை செய்வோர் வேளாளர் எனவும் பட்டனர். இப்பிரிவுகள் பெரும்பாலும் நகரங்களிலேயே காணப்பட்டன.

இச்சாதிப் பிரிவுகள் மருத நிலத்திலேயே பெரும்பாலும் தோன்றி வளர்ச்சியடைந்தன. வடநாட்டவர் தொடக்கத்தில் நிறம்பற்றிப் பிரித்திருந்த வருணங்களும் தமிழரது தொழில் பற்றிய சாதிகளும் வேறுபாடுடையன. வருணம் என்பதற்கு நிறம் என்பது பொருள். வடநாட்டவரின் வருணத்துக்குப் பிறப்பே காரணம். வடநாட்டவரின் பிராமண, சத்திரிய, வைசிய, சூத்திர என்னும் நாற்பிரிவுகளே தென்னாட்டு அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் பிரிவுகள் எனப் பிற்காலத்தவர் மயங்கினமையால் பல தடுமாற்றங்கள் உண்டாயின.

## அந்தணர், பார்ப்பார், பிராமணர் என்னும் பெயர்கள் பற்றிய மயக்கம்

அந்தணர் என்போர் துறவிகளாவர் என்பது சங்க நூல்களாலும், திருக்குறளாலும் பிறசான்றுகளாலும் அறியக் கிடக்கின்றது. தமிழ் நாட்டிழல் கோயிற் பூசை செய்வோர் கோயில்களை மேற்பார்த்தல் பற்றிப் பார்ப்பார் என்னும் பெயர் பெற்றிருந்தனர். தொடக்கத்தில் இன்னவர்தான் பார்ப்பாராயிருக்கலாம் என்னும் நியதி இருக்கவில்லை. கோயில்களை மேற்பார்க்கும் குடும்பத்தினர் பெருகி ஒரு பிரிவாகப் பிரிந்தனர். இவர்கள் கடவுட்பணி செய்தமைபற்றி உபசார வழக்கில் அந்தணர் என்படுவாராயினர். பார்ப்பார் துறவிகளல்லர். பிராமணர் தமிழ் நாட்டவரல்லர். இவர்கள் வடநாடுகளிலிருந்து தென்னாடுகளில்வந்து குடியேறினோர். தில்லைமூவாயிரவர், 48,000வர் 8,000வர் 3,700வர் என இக்கூட்டத்தினர் பட்டையங்களில் குறிக்கப்பட்டுள்ளார்கள். இவர்கள் பார்ப்பனக் குடும்பங்களோடு கலந்துள்ளார்கள். மத்திய காலத் தமிழ் நாட்டு அரசர் வடமொழிக்கு மதிப்புக் கொடுத்துப் பிராமணரை ஆதரித்தமையால் பார்ப்பன வகுப்பினரும் தம்மைப் பிராமணர் எனக் கூறுவாராயினர். இதுவே அந்தணர் பார்ப்பார் பிராமணர் என்போரின் வரலாறாகும்.

## வாணிகம்

"இற்றைக்கு மூவாயிரம் ஆண்டுகளின்முன் இந்தியா தூரகிழக்கு, தூரமேற்கு நாடுகளோடு முதன்மையான கடல் வாணிகம் நடத்தினது என்றுகாட்டுவதற்குள்ள நல்ல சான்றுகள் உள்ளன. கம்போதியா, யாவா, சுமத்திரா, போர்ணியோ, யப்பான், தென்சீனா, மலாயா, அராபியா, பாரசீகத்திலுள்ள முதன்மையான பட்டினங்

கள், ஆபிரிக்காவின் கிழக்குக்கரை என்பவைகளில் இந்தியர் வாணிகத்தின் பொருட்டுக் குடியேறியிருந்தார்கள். அவர்கள் இந்நாடுகளோடு மாத்திரமன்று. அக்காலத்தில் அறியப்பட்டிருந்த உலகம் முழுவதோடும், உரோம இராச்சியங்களோடும் வாணிகம் நடத்தினார்கள்"[1]

இற்றைக்கு ஆறாயிரம் ஆண்டுகளின் முன் சிந்துவெளியில் வாழ்ந்த மக்கள் அயல் நாடுகளோடு ஒழுங்குபட்ட முறையில் வாணிகம் நடத்தினார்கள் என அறிகின்றோம்."[2] சிந்துவெளி நகரங்கள் வாணிகத்துக்கும் கைத்தொழிலுக்கும் மத்திய இடங்களாகவிருந்தன. உள்நாட்டுப் போக்குவரத்துக்கு இரண்டு சக்கரங்களுள்ள வண்டிகள் பயன்படுத்தப்பட்டன. அவ்வண்டிகள் இன்று சிந்துவில் பயன்படுத்தப்படும் வண்டிகளைப் போன்றவை. இன்று சிந்து ஆற்றில் ஓடுகின்ற ஓடங்களும் அக்கால ஓடங்களை ஒத்தனவே. கடற்கரையை அடுத்த நாடுகளிலிருந்து உணவுப் பொருள்களைப் பெறும் முறையில் மாத்திரம் வாணிகம் நடைபெறவில்லை. அயல் நாடுகளிலிருந்து உலோகப் பொருள்களும் பிறவும் பெறப்பட்டன. பலுச்சிஸ்தானத்திலும் இராசபுத்தானத்திலுமிருந்து உலோகங்களும், தென்னிந்தியாவிலிருந்து சங்கும், உல்லாச வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்கள் பிற இடங்களிலிருந்தும் பெறப்பட்டன. பாரசீகத்திலும் ஆப்கானிஸ்தானத்திலும் இருந்து நிறக்கற்களும், சீனாவிலும் பர்மாவிலும்


ஆந்திர நாணயம் (கி. மு. 200)

---

1. Indian shipping. p 4—R. K, Mookerji M.A.

2. The light of the most ancient East P. 2/0—V, Gordon & Chile.

இருந்து நீலக்கற்களும் பெறப்பட்டன. முத்திரை வெட்டும் கற்கள், சுற்றிவரக்குமிழி வைத்த பானைகள், பாண்டங்கள் செய்யும் கற்கள் போன்ற இந்தியப் பொருள்கள் கி. மு. 3500 வரையில் பாபிலோனுக்குச் சென்றன என்று அறிகின்றோம்.[3]

" எகிப்துக்கும் இந்தியாவுக்கும் இடையில் முற்காலத்தில் போக்குவரத்து நடைபெற்றதெனத் தெரிகிறது. அலக்சாந்திரியாவில் சந்தித்த படித்த இந்தியர்கள் மூலம் தான் பல செய்திகளைக் கேட்டு அறிந்துகொண்டதாகத் தாலமி குறிப்பிட்டுள்ளார். இந்தியாவிலிருந்து சமயயாத்திரிகர்கள் சிரியாவிலுள்ள ஹைராபொலிசுக்குச் (Hierapolis) சென்றார்கள் என்று லூசியன் (Lucian) கூறியுள்ளார். கிறித்து பிறப்பதற்குமுன் இந்தியர் அபிசீனியாவோடு வாணிகம் புரிந்தார்கள் என்பது கிறித்துவ வேதங்களிற் காணப்படுகின்றது. இந்தியர் அராபியாவிலும் குடியேறியிருந்தார்கள். கிறித்துவ ஆண்டின் தொடக்கத்தில் அவர்கள் சீனக் கடற்கரை நாடுகளில் குடியேறத் தொடங்கினார்கள். கி. மு. 350-ல் வரலாறு எழுதிய



ஆந்திர நாணயம்
(கி. பி. 200)

3. Peagent of Indias commerce shows that within historic times Peninsular India has been in direct contact with East Africa, Somaliland, Abyssinia, Egypt, Arabia, Babylonia, Indonasia and china, to say nothing of the Makran coast and the influence of the routes. The panorama of possible cultural influence is wide—Side lights of the Dravidian problem—F. A. Richards—Quarterly Journal of the Mythic society Vol. 6.

பரோசஸ் (Berossus) பாபிலோனில் அன்னியர் கூட்டமாகக் குடியேறியிருந்தனர் எனக் குறிப்பிட்டுள்ளார். கி. மு. 63-ல் பிறந்த ஸ்ராபோ (Strabo) என்பார் உரோம நாட்டுத் தங்கம் இந்தியாவுக்கு அதிகம் செல்வதைப்பற்றிக் கவலைப்பட்டார். பிளினி கூறியிருப்பது வருமாறு: இந்தியாவுக்குப் பயணஞ் செய்பவர்கள் ஒசெலிஸ் (Ocelis) என்னும் துறைமுகத்தில் இறங்குவது நல்லது. கிப்பாலுஸ் என்னும் பருவக்காற்று வீசுமானல் நாற்பது நாட்களில் முசிறித் துறைமுகத்தை அடையலாம். இதன் சூழல்களில் கடற் கொள்ளைக்காரர் இருக்கின்றார்கள். ஆதலால் அது இறங்குவதற்கு தகுந்த இடமன்று. நான் இதை எழுதுகின்ற காலத்தில் அங்கு ஆள்கின்ற அரசனின் பெயர் செலிபுத்துருஸ். வேறு ஒரு வாய்ப்பான துறைமுகம் நெல்சிண்டி பக்காரி (Nelcyndi Bacare) இத்துறைமுகம் தொலைவிலே உள்ள மதுரையிலிருந்து ஆட்சிபுரியும் பாண்டியனுக்குரியது. புளூற்ற் என்பவர் "ஆகஸ்தசின் பரிவாரங்களுள் ஒருவரான புத்த சன்னியாசி அவர் நாட்டுக்குள்ள வழக்கப்படி நெருப்பில் விழுந்து இறந்துபோனார். அவருடைய சமாதிக் கட்டிடம் இங்கு கிடக்கிறது" என்று குறிப்பிட்டுள்ளார்.

"கடல் வாணிகம் பெரிதும் திராவிடர் வசம் இருந்தது. அதில் ஆரியர் சிறுபங்கு பற்றினார்கள். அராபியா, ஆபிரிக்கா, சீனக் கரைகளில் குடியேறிய இந்தியரிற் பெரும்பாலோர் திராவிடராதல் வேண்டும். வடநாட்டு வாணிகத்தைவிடத் தென்னாட்டு வாணிகம் முதன்மையுடையதென்றும், இரத்தினக் கற்கள் போன்ற விலையுயர்ந்த பண்டங்கள் தெற்கிலிருந்து வந்தன என்றும் வடநாடு தோல், கம்பளி என்பவைகளை அளித்தனவென்றும், இரத்தினக் கற்கள், சங்கு முதலியன தெற்கிலிருந்து வந்தனவென்றும்

கௌடலியர் குறிப்பிட்டுள்ளார். தாம்பிரபர்ணி — லங்கை, பாண்டியநாடு என்பன அவரால் குறிக்கப் பட்டுள்ளன.

"இந்தியாவிலிருந்தே நல்ல யானைகள் மேற்குத் தேசங்களுக்கும் கொண்டுபோகப்பட்டன. தந்தம், குரங்கு மயில் முதலியவை இந்திய நாட்டுக்குரியவை. இவைகளை குறிக்க எபிரேய (Hebrew) மொழியில் வழங்கிய சொற்கள் எபிரேயம் அல்ல! திராவிடம். இந்தியாவி லிருந்து ஒரு மயில் எகிப்துக்கு அனுப்பப்பட்டது. அது யூபிதர் கடவுளுக்கு நேர்ந்துவிடப்பட்டது. பாபிலோனுக்கு மயில் அனுப்பப்பட்டதைப்பற்றிப் பவேரு சாதகம் கூறு கின்றது. இந்நூல் கி. மு. 400 வரையில் செய்யப்பட்டது. கிரேக்கமொழியில்வழங்கும் ஒரிசா என்பது அரிசி என்னும் திராவிடத்தின திரிபு. கராம்பும் சாதிக்காயும் மலாய தீவு களில்முற்காலத்தில் கிடைப்பனவாயிருந்தன. அவை கி.பி. 180-ல் அலக்சாந்திரியாவுக்குக் கொண்டுபோகப் பட்டன. ஆகவே கி.பி. முதல் நூற்றாண்டில் இந்திய மலாய வாணி கம் நடைபெற்றிருக்கலாம். அபிசீனியாவின் தலைநகராகிய அக்சமில் (Auxam) நடப்பட்டுள்ள ஒரு கல்லில் எழுத் துப் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல் கி.பி. முதல் நூற் றாண்டில் நாட்டப்பட்டது. அவ்வெழுத்துக்கள் இந்தி யாவைக் குறிப்பிடுகின்றன. எகிப்தில் தலைநகராகிய மெம்பிஸ் அழிபாடுகளில் இந்திய ஆடவர் மகளிரைக் காட்டும் ஓவியங்கள் காணப்படுகின்றன என்றும் அங்கு இந்தியர் குடியேறியிருந்தார்களென்றும் பிளிண்டேர்ஸ் பெற்றி (Flinders Petrie) என்பார் கூறியுள்ளார். புளூற்ரு காலத்தில் வாழ்ந்தவராகிய டையோ கிறிஸ் தோதம் (Dio Chrysostom) அலக்சாந்திரியாவில் நட

மாடிய பல நாட்டு மக்களிடையே இந்தியரைத் தான் பார்த்தாகக் கூறியுள்ளார்"*

"கோடைகாலச் சூரிய அயன காலத்தில் ஆண்டு தோறும் நூற்றியிருபது மரக்கலங்கள் மோயிஸ் ஹார் மூஸ் (Mois Harmos) என்னும் செங்கடற் கரையி லுள்ள எகிப்திய துறைமுகத்திலிருந்து புறப்பட்டன. பருவக் காற்றின் உதவியைப் பெற்று அவை நாற்பது நாட் களில் இந்தியத் துறைமுகங்களை அல்லது இலங்கைத் தீவை அடைந்தன. மரக்கலங்கள் விலை உயர்ந்த பண்டங் களுடன் திரும்பி வந்தன. பண்டங்கள் செங்கடற்கரை யிலிருந்து நீல நதிக்கு ஒட்டகங்களிலேற்றிக் கொண்டு போகப்பட்டன. அவை நீல ஆற்று வழியாக அலக் சாந் திரியாவை அடைந்து பின் உரோமநாட்டுத் தலைநகரைச் சேர்ந்தன." இவ்வாறு உரோமன் வரலாற்றாசிரியர் ஒருவர் குறிப்பிட்டுள்ளார். இஞ்சி, மிளகு, கறுவா போன்றவைகளுக்கு மேற்கு நாடுகளில் மிகத் தேவை யிருந்தது. வயிரம் முத்து, பட்டு என்பவற்றையும் அவர் கள் எவ்வளவு பொருள் கொடுத்தும் வாங்க ஆயத்தமாக விருந்தார்கள். கிழக்குத் தேசங்களிலிருந்து சென்ற பண்டங்கள் ஒன்றுக்கு நூறு மடங்கு இலாபத்துக்கு விற்கப்பட்டன. இதனால் கவரப்பட்டு மிகப்பலர் கிழக்குத் நாடுகளோடு வாணிகத்தில் ஈடுபட்டிருந்தார்கள் அவர் களுக்கு வேண்டிய பண்டங்களை சேர நாடும் பாண்டிய நாடும் அளித்தன. குமரி, கொற்கை, காயல் பாம்பன் என்னும் துறைமுகங்கள் அதிக வருவாயளித்தன. கிறித் துவ ஆண்டின் ஆரம்ப காலத் கிழக்கு நாடுகளின் வாணிகம்

---

* Kannada passages in the Oxyrhyncus Papyri No. 413

உரோமர் வசம் இருந்தது. வயிரங்களுக்கு அடுத்தபடியில் முத்து விலை ஏறப்பெற்றதாயிருந்தது. உரோமப் பெண்கள் பட்டு ஆடைகளை உடுக்க விரும்பினார்கள். அவர்கள் பொன் எடைக்குப் பட்டை நிறுத்து வாங்கினார்கள் இரத்தினங்கள் இழைத்துச் செய்யப்பட்ட அணிகலன்கள் தென்னிந்தியாவினின்றும் உரோமுக்கு அனுப்பப் பட்டன. கோயமுத்தூர்ப் பகுதியிலுள்ள பாடியூரில் கிடைக்கும் கோமேதகத்தை உரோம வணிகர் அதிக விலை கொடுத்து வாங்கினார்கள். இந்தியப் பொருள்கள் உரோமில் நூறு மடங்கு விலைக்கு விற்கப்பட்டதென்றும் ஆண்டில் எட்டு இலட்சம் தங்க நாணத்தை இந்தியா வாணிக மூலம் இழுத்து விடுகின்றதென்றும் அவ்வாசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

## சமயக்கொள்கைகள்

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயே திராவிட மக்கள் உலகம், உயிர், இறைவன் என்னும் முப்பொருள் உண்மைகளை ஆராயும் உயர்ந்த சமயக்கொள்கை உடையவர்களாயிருந்தார்கள். மொகஞ்சதரோ அரப்பா முதலிய இடங்களிற்கிடைத்த முத்திரைக் கற்களில் பலவகை விலங்குகளின் இடையே ஆலமரத்தின் கீழ் யோகத்தில் வீற்றிருக்கும் கோலமுடைய வடிவம் ஒன்று காணப்படுகின்றது. இவ்வடிவம், கடவுள் உயிர்களுக்குத் தலைவன் (பசுபதி) என்னும் கருத்தை விளக்குகின்றதென ஆராய்ச்சியாளர் கூறியுள்ளார்கள். அக்காலத்திலேயே மக்கள் யோகத்தின் தன்மைகளையும் அதனால் பெறும் ஆற்றல்களையும் நன்கு அறிந்திருந்தார்கள். பழைய தமிழரின் சமயக்கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டே பௌத்த சைன மதக்கொள்கைகளும் எழுந்தன. புத்தர்

அரசமரத்தின் கீழ் யோகத்திருந்தார். சைனக் கடவுள் அசோகமர நிழலில் இருப்பவர் என்னும் கொள்கைகள் மொகஞ்சதரோ மக்கள் கொண்டிருந்த கருத்தைப் பின் பற்றியவே. கடவுள் யோகத்திலிருப்பதாகக் காட்டும் வடிவம், கடவுளாய் வருதற்கும் யோகப்பயிற்சி அவசியம் என்பதை அக்கால மக்கள் கொண்டிருந்தார்கள் என்பதை உணர்த்துதல் கூடும். பௌத்த சைன மதங்கள் பழைய திராவிட மதக்கொள்கைகளைத் தழுவி எழுந்தன வென் பதை வரலாற்றாசிரியர்கள் ஒப்புக்கொள்கின்றனர்.

பழையகாலத்தில் சமயக்கருத்துக்கள் ஏட்டில் எழுதி வைக்கப்படாது ஆசிரிய மாணாக்கமுறையில் சொல்லிக் கொடுக்கப்பட்டுவந்தன. இவ்வாறு தலைமுறையாக வந்த சமய உண்மைகள் மறைகள் எனப்பட்டன. உபநிட தங்கள் எனப்பட்ட சமயநூல்களிற் சொல்லப்படும் கருத்துக்கள் திராவிடரின் கொள்கைகளே. அக்காலத்தில் பிராமணர் அரசவகுப்பினரின் பாதங்களிலிருந்து உபநிடத உண்மைகளைப் பயின்றார்கள். உபநிடத ஞானங்கள் பிராமணரால் அறியப்படாதவை.' இக்கருத்துக்களே தமிழ் மக்களின் சமயக்கருத்துகளாகும். அக்கொள்கைகள் இப் பொழுது சைவசித்தாந்தக் கொள்கைகள் என வழங்கும். சைவசித்தாந்தக் கொள்கைகள் வரலாற்றுக் காலத்துக்கு முன் தொட்டுத் தமிழ் மக்களிடையே வழங்கிவரும் உயர்ந்த கருத்துக்கள் என டாக்டர் பாப் கூறியுள்ளார்.

தமிழருடைய மதம் எல்லாமக்களுக்கும் பொது வானது. இதுவே வள்ளுவரதும், தொல்காப்பியரதும் மதமாகும். திருக்குறளில் வினைப்பயன், மறுபிறப்பு, உயி ரின் அழிவின்மை, பாவ புண்ணியம், இறைவன், இருவினை களையும் பற்றுமல் இறைவன் நிற்கும் தன்மை, தவம்,

தவத்தினால் பெறும் ஆற்றல் போன்றவை கூறப்பட்டுள்ளன. மந்திர வித்தைகளினாலோ கடவுளுக்குக் காணிக்கைகள் கொடுப்பதினாலோ உயிர்கள் உயர்நிலை அடைய மாட்டா வென்பதே அறிவுடையோர் மதமாகும்.

தொடக்கத்தில சமயம் அச்சம் உதவியற்ற தன்மை போன்ற ஏதுக்களால் தோன்றி வளர்ந்தது; பின்பு சிறிது சிறிதாகப் பண்பாடடைந்து உயர் நிலை அடைந்தது. இக்கொள்கைகளை முள்ளுள்ள தாழை மரத்தில் பூத்த நறு மணமுள்ள பூவுக்கு ஒப்பிடலாம். இன்றைய மக்களின் குறைபாடு பூவைப்போற்றாது தாழையின் முள்ளுள்ள இலைகளைப் போற்றுதல் போன்றிருப்பதே.

## உணவு

மக்கள் தாம் வாழ்ந்த இடங்களுக்கு ஏற்ப வெவ் வேறு வகை உணவினை உண்டுவந்தார்கள். தாவரம் ஊன் என்னும் இருவகை உணவுகளும் பெரும்பாலும் கொள் ளப்பட்டன. இவற்றுள் தாவரவகையே உணவின் பெரும் பகுதியாகவும் ஊன் கறிவகைபோன்று சிறிதளவாகவும் இருந்தன. சங்ககால இலக்கியங்களால் வேளான் வகுப்பி னர் பார்ப்பனர் என்னும் இருவகுப்பினரல்லாத மற் றையோரெல்லாம் ஊன் உணவு கொண்டார்கள் எனத் தெரிகிறது. ஊன் உணவு கொள்ளுதல் சிறந்ததன்று என்னும் கொள்கை நிலவியிருந்ததென்பது திருக்குறளால் நன்கு தெரிகின்றது.

கறிவகைகளுக்கு மிளகு பயன்படுத்தப்பட்டது. மிள குக்குக் கறி என்பது மற்றொரு பெயர். முற்காலத் தமிழ் மக்கள் மிளகாயைப்பற்றி அறியார். ஐரோப்பியர் மூலம் மிளகாய் இந்தியாவை அடைந்தது. மிளகாய்ச் செடி

தென்னமெரிக்காவுக்குரியது. இதன்காய் மிளகுபோல் காரமாயிருத்தல்பற்றி மிளகாய் (மிளகு+காய்) எனப் பட்டது. ஐரோப்பியர் இந்தியாவினின்றும் மிளகை வாங்கிச் சென்றார்கள். கிரேக்கரும் உரோமரும் இதனை அதிகம் விரும்பினமையால் இதற்கு 'யவனப்பிரியா' என்னும் இன்னொரு பெயரும் வழங்கிற்று. யவனர் என்பது கிரேக்கரையும் உரோமரையும் குறிக்க வழங்கிய பெயர். மிளகைக் குறிக்கக் கிரேக்கர் பிப்பிலி என்னும் பெயரை வழங்கினர். பிப்பிலி என்பது திப்பிலி என்பதன் திரிபு. பிப்பிலி என்னும் கிரேக்க சொல்லின் திரிபே பெப்பர் என்னும் ஆங்கிலச்சொல். முற்காலத்தில் மிளகு ஐரோப்பிய மக்களின் சொகுசான உணவுப் பொருளாக விருந்தது. மத்திய காலத்தில் அது அவர்களுக்கு இன்றியமையாத உணவுப்பொருளாக விருந்தது. முதலில் வெனீசிய வணிகரும், பின்பு போர்த்துக்கேயரும் ஒல்லாந்தரும் மிளகை மேற்கு ஆசிய நாடுகளுக்குக் கொண்டு சென்று வாணிகம் புரிந்தனர். பதினாறாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஒல்லாந்தர் மிளகின் விலையை இருமடி ஆக்கினமையால் ஆங்கிலரால் 1599-ல் 'கிழக்கிந்திய வாணிகக் கம்பனி' தொடங்கப்பட்டது. அதனால் இந்தியாவில் ஆங்கிலர் ஆட்சி தோன்றி வளர்வதாயிற்று.

நிகண்டு நூல்களில் சோறு, சிற்றுண்டி வகைகளைக் குறிக்கப் பற்பல பெயர்கள் காணப்படுகின்றன. அவைகள் எல்லாம் வெவ்வேறு வகையாக செய்யப்பட்ட உணவு வகைகளைக்குறிக்கின்றன. "அறுசுவை உண்டியமர்ந்து இல்லாளூட்ட" என்னும் நாலடியார் அடியினால் செல்வர் அறுசுவையுள்ள உணவுகளை உண்டார்கள் என அறிகின்றோம்.

கறிவகைகளுக்குத் தாளிதம் செய்யப்பட்டது. தேன், காய், பிஞ்சு, பழம், கிழங்கு, தளிர், இலை முதலியன உணவாகப் பயன்படுத்தப்பட்டன. தமிழில் மதுவகைகளைக் குறிக்க அறுபது பெயர்கள் வரையில் காணப்படுகின்றன. இதனால் அக்காலமக்கள் மதுவை அதிகம் உண்டார்கள் எனத் தெரிகின்றது. நெல், தேன், பழவகைகள், பூவகைகளிலிருந்து மதுவகைகள் செய்யப்பட்டன. அவை சாடிகளில் ஊற்றிக் காரமேறும்படி நிலத்தில் புதைத்து வைக்கப்பட்டன. "தேட்கடுப்பன்ன நாட்படுதேறல்" எனக் கள்ளின் காரம் குறிப்பிடப்பட்டுள்ளது. அக்காலக் கள்வகைகள் இக்காலச் சாராய வகைபோன்று வாலையிலிட்டு வடிக்கப்பட்டவையல்ல; இக்காலபீர் (beer) என்னும் மதுப்போன்றவை.

## அயல்நாட்டுப் பயணகாரர் இந்திய மக்களின் பழக்க வழக்கங்களைப்பற்றிக் கூறியுள்ள சில குறிப்புகள்:

*இற்சிங் என்னும் சீனயாத்திரிகன் கூறியிருப்பது வருமாறு: விருந்துகொடுப்போர் புத்தகுருமாரை வணங்கி அவர்களை வீட்டுக்கு அழைக்கிறார்கள். விருந்தில் பெரும்பாலும் செப்புப் பாத்திரங்கள் பயன்படுத்தப் படுகின்றன. அவை சாம்பலிட்டு மினுக்கப்படுகின்றன. ஒவ்வொரு குருவும் ஒவ்வொரு மணையில் இருப்பார். ஒருவரோடு ஒருவர் முட்டாதபடி மணைகள் எட்ட இடப்படுகின்றன. மட்பாத்திரங்கள் ஒருமுறைக்குமேல் பயன்படுத்தப் படுவதில்லை. ஒருமுறை பயன்படுத்தப்பட்ட பாத்திரங்கள் குழியில் வீசப்படுகின்றன. பயன்படுத்திய மட்பாத்திரங்களை ஒருபோதும் வைத்திருத்தல் கூடாது. பிச்சை இடும் இடங்களில் இவ்வாறு வீசப்பட்ட பாத்திரங்கள் குவிந்து

* Itsing. கி. பி. 6-ம் நூற்றாண்டு

இடக்கின்றன. சீனுதேசத்தில் செய்யப்படுவனபோன்ற உயர்ந்த மட்பாத்திரங்கள் பயன்படுத்தப் பட்டபின் சுத்தஞ்செய்து வைக்கப்படுகின்றன. விருந்தினர் சாப்பிடும் இடம் சாணியால் மெழுகப்பட்டிருக்கும். வாயிலில் பெரிய பானைகளில் தண்ணீர் வைக்கப்பட்டிருக்கும். குருமார் வந்ததும் அவர்கள் தமது மேல் அங்கியின் கட்டுகளை அவிழ்ப்பார்கள். அவர்கள் தமது கைகளைப் பயறு அல்லது மண்ணைத்தேய்த்துக் கழுவுவார்கள். குருமார் தமது குண்டிகையிலுள்ள நீரைப் பயன்படுத்துவர்; அல்லது விருந்துக்கு அழைத்தவர் தண்ணீரை ஊற்ற அதனைப் பயன்படுத்துவர். பின்பு அவர்கள் மணைகளில் அமர்வர். அவர்களுக்கு முன்னுல் உண்ணும் தட்டுகள் வைக்கப்படும். உண்பதன்முன் கடவுளைத் துதிப்பது வழக்கமன்று. விருந்துக்கு அழைத்தவர் உணவைப் பரிமாறுவார். பரிமாறும்போது பெருவிரற் பருமையுள்ள இஞ்சித்துண்டும் ஒருகரண்டி உப்பும் கொடுக்கப்படும். உப்புக் கொடுப்பவன் தலைமைக் குருவின்முன் கைகட்டி முழங்கால் படிந்து நின்று வணங்குவான்; அப்பொழுது அவர் எல்லாருக்கும் உணவைச் சரிவரப் பரிமாறு என்று சொல்வார். எல்லோருக்கும் உணவு படைத்தபின் உண்ண வேண்டுமென்று காத்திருக்க வேண்டியதில்லை.

மார்க்கோபோலோ கூறியிருப்பது: மலபாரில் எல்லா ஆடவரும் மகளிரும் நாளில் இருமுறை குளிக்கிறுர்கள். அவ்வாறு செய்யாதவர் தாழ்ந்தவர் எனக் கொள்ளப் படுகின்றனர். அவர்கள் வலது கையால் உண்கின்றனர். எக்காரணம் பற்றியாவது அவர்கள் உணவை இடக்கையால் தொடமாட்டார்கள். அவர்கள் இடக்கையை அசுத்தமான தேவைகளுக்குப் பயன் படுத்துகின்றனர். ஒவ்வொருவனும் நீர் பருகுவதற்குத் தனிமையான ஏனம் வைத்திருக்கிறுன். இன்னொருவன் பயன்படுத்தும் ஏனத்திலிருந்து இன்னொருவன் நீர் உண்ணமாட்டான். நீர் உண்ணும்போது அவர்கள் ஏனத்தை வாயில் முட்ட விடமாட்டார்கள்; வாய்க்குச் சிறிது தூரத்தில் பிடிப்பார்

கள். எவனாவது ஏனத்தை வாயில் வைத்தல்கூடாது நீர் குடிப்பதற்கு அதனை அன்னியனிடம் கொடுக்கவும் கூடாது, அன்னியனிடம் ஏனம் இல்லாவிடின் அவர்கள் நீரை அவன் கையில் ஊற்றுவார்கள். அவன் கையை ஏனமாகப் பயன்படுத்துவான்.

*மக்கள் மிகவும் நுட்பமாகச் சமையல் செய்கிறார்கள். அவர்கள் நூறுவகையாகச் சமையல் செய்கின்றார்கள். தினமும் சமையல் வெவ்வேறு வகையாகவுள்ளது.

## முடிவுரை

திராவிட மக்களே இந்திய நாட்டின் ஆதிமக்கள். இம்மக்கள் இற்றைக்கு ஆறாயிரம் ஆண்டுகளின் முன் சிறந்த நாகரிகவளம் பெற்று விளங்கினார்கள். திராவிடர் நாகரிகப் பண்பாடுகள், சமயக்கருத்துகள், கலைகள் என்பன புதிதாக இந்தியநாட்டை வந்தடைந்த மக்கள் திராவிடமக்களோடு கலந்து தோற்றுவித்த புதிய சந்ததியினரால் சிற்சில வேறுபாடுகளுடன் கைக்கொள்ளப்பட்டன. இன்று அவைகளே, இந்தியக்கலை, இந்திய மதக்கொள்கைகள், இந்திய நாகரிகம் என்னும் பெயர்கள் பெற்றுவிளங்குகின்றன.* இந்திய நாகரிகத்துக்கு மாத்திரமன்று பழைய உலக நாகரிகத்துக்கே திராவிட அடிப்படை உண்டு என்பதை ஏற்ற மேற்கோள்களுடன் இச்சிறிய நூலில் விளக்கியுள்ளோம்.

---

* Chau Ju - Kua.

A variety of causes partly political and partly literary, has tended to the belittlement of peninsular India's contribution to the history both of India and of the whole world at large. The time is ripe for South India to champion her own cause and assert her claims to recognition—*Side lights of the Dravidian Problem*—F. R. Richards. I. C. S.

ஸ்ரீ பிரின்டர்ஸ், 147, பவழக்காரத் தெரு, சென்னை 1.